83-2


# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

தொகுதி 59 | ஜனவரி 1979 | இதழ்—1


## பொருளடக்கம்

## சந்தாதாரர்களுக்குப் பிரத்தியேக வேண்டுகோள்

சந்தாக்களைப் புதுப்பித்துக்கொள்ள ஞாபகமூட்டுவதிலும் அவற்றைப் புதுப்பிப்பதிலும் செலவும் சிரமமும் ஏற்படுகின்றன. இவற்றைத் தவிர்க்கவே டிபாசிட் சந்தா முறையை ஏற்படுத்தியுள்ளோம். அன்பர்கள் டெபாசிட் சந்தாதாரர்களாகச் சேர்ந்தும் பிறரைச் சேர்த்து உதவியும் விஜயத்தின் வளர்ச்சிக்குத் துணைபுரியக் கோருகிறோம்.

மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தேவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங்களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

வாசகர்கள் மூன்று புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துப் புத்தாண்டை ஸ்ரீராமகிருஷ்ண விஜயத்துடன் துவக்கும்படி செய்யலாம். தங்களைப் போன்று பலரும் ஸ்ரீராமகிருஷ்ண விஜயத்தைப் படித்துப் பயனுற இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது பெருநலன் தரும்.

## டெபாசிட் முறை

**ஆண்டுதோறும் ரூ. 10 சந்தா செலுத்திப் புதுப்பிப்பதற்குப் பதிலாக ரூபாய் 125 டெபாசிட் செய்துவிட்டால், தொடர்ந்து மாதந்தோறும் ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் பத்திரிகை வந்துகொண்டிருக்கும். பத்திரிகை வேண்டாம் என்று (குறைந்தது ஐந்து வருடங்களுக்குப் பிறகு) கருதும்போது தாங்கள் டெபாசிட் செய்த முழுத் தொகையாகிய ரூபாய் நூற்று இருபத்தைந்தையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம்.**

டெபாசிட் சந்தாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 10-ஆகவோ செலுத்தலாம்.

---

## எழுத்தாளர்களுக்கு

நமது பத்திரிகைக்கு ஏற்புடைய கதை, கட்டுரை, தகவல்கள், கவிதைகள் அனுப்ப வேண்டாம்) மகான்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் முதலிய எதையும் தபால் மூலமே அனுப்ப வேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு.

**மக்களுக்குப் பயன்படுவதாகவும், சுருக்கமாகவும் கருத்தாழம் கொண்டதாகவும் எழுத்தோவியம் அமைவது முற்றிலும் அவசியம்.** காகிதத்தின் ஒரு பக்கத்தில் மட்டும், வரிக்கு வரி நிறைய இடம் விட்டு, எளிய தமிழ் நடையில் தெளிவாக எழுதப்பட வேண்டும்.

பத்திரிகையில் வெளியிடப்படுவதாக இருந்தால், அனுப்பியவருக்கு ஒரு வார காலத்திற்குள்ளாக ஆசிரியர் சார்பாகப் பதில் கிடைத்துவிடும். அவ்விதம் பதில் பெறாத அன்பர்கள், போதிய தபால் தலைகளை அனுப்பிவைத்துத் தமது படைப்புக்களைத் திரும்பப் பெற்றுக்கொள்ள வேண்டுகிறோம்.

ஆசிரியர்

**ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்.**

---



# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை
—திருமூலர்

தொகுதி 59 || காளயுக்தி ஹூ தை மீ || இதழ் 1




स्वस्ति प्रजाभ्यः परिपालयन्तां
न्याय्येन मार्गेण महीं महीशाः ।
गोब्राह्मणेभ्यः शुभमस्तु नित्यं
लोकास्समस्तास्सुखिनो भवन्तु ॥

ஸ்வஸ்தி ப்ரஜாப்ய: பரிபாலயந்தாம்
ந்யாய்யேந மார்கேண மஹீம் மஹீசா: |
கோப்ராஹ்மணேப்ய: சுபமஸ்து நித்யம்
லோகாஸ் ஸமஸ்தாஸ் ஸுகிநோ பவந்து ||

அரசர் நீதி தவருமல் தம் குடிகள் மீது ஆட்சி நடத்தி வருவாராக. நீதி வழியே செல்வதனுல் வீடுகளிலெல்லாம் சீரும் செல்வமும் கொழித்து விளங்குக. ஆவினங்களும் சான்ருேர்களும் சுகமும் அமைதியும் பெற்றுச் செழித்து வாழ்க. உலகம் அனைத்தும் சுகம் பெற்று ஓங்குக.

வான்முகில் வழாது பெய்க
மலிவளம்; சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க
குறைவிலாது உயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க
நற்றவம் வேள்வி மல்க
மேன்மை கொள் தெய்வநீதி
விளங்குக உலகம் எல்லாம்.



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

ஞாயிறு, மார்ச் 11, 1883

தட்சிணேசுவரத்துப் பக்தர்: இந்த அனாஹத சப்தமானது எப்போதும் உள்ளும் புறமும் ஒலித்துக் கொண்டே இருக்கிறது.

ஸ்ரீராமகிருஷ்ணர்: வெறும் சப்தத்தை மட்டும் கேட்டால் போதாது. அந்தச் சப்தம் குறிப்பிடும் பொருள் ஒன்று இருக்க வேண்டுமே! உன் பெயர் மட்டுமே எனக்கு மகிழ்ச்சியைத் தந்துவிடுமா என்ன? உன்னை நேரில் பார்க்காவிட்டால் எனக்குப் பரிபூரண மகிழ்ச்சி ஏற்படாது அல்லவா?

தட்சிணேசுவரத்துப் பக்தர்: இந்தச் சப்தமே பிரம்மம். இந்த அனாஹத ஒலியே பிரம்மம்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (கேதாரைப் பார்த்து): உனக்குப் புரிகிறதா? இந்தப் பக்தர் ரிஷிகளைப் போலப் புரிந்துகொண்டிருக்கிறார்! இது ரிஷிகளுடைய மதம். ரிஷிகள் ஸ்ரீராமபிரானை நோக்கி, "ஏ ராமா, உம்மைத் தசரதருடைய புத்திரர் என்றே நாங்கள் அறிவோம். பரத்வாஜர் முதலிய ரிஷிகள் உன்னை அவதாரபுருஷர் என்று அறிந்து பூஜை செய்யட்டும். நாங்கள் அகண்ட சச்சிதானந்தப் பிரம்மத்தையே விரும்புகிறோம்" என்று கூறினர். ஸ்ரீராமபிரான் அவர்கள் சொன்னதைக் கேட்டுச் சிரித்துக்கொண்டே போய்விட்டார்.

கேதார்: ராமரை ரிஷிகள் அவதாரபுருஷர் என்று அறிந்துகொள்ளவில்லை. அந்த ரிஷிகள் மூடர்களாகத்தான் இருந்திருக்க வேண்டும்!

ஸ்ரீராமகிருஷ்ணர் (கடுகடுத்த குரலில்): நீ இம்மாதிரி பேசாதே. அவரவருடைய மனப் பரிபாகத்தைப் பொறுத்து இதெல்லாம் அமைகிறது. மேலும், அவரவருடைய ஜீரணசக்தியைப் பொறுத்தது. தாய் ஒருத்தி ஒரே மீனைப் பலவேறு முறைகளில் சமைத்துக் குழந்தைகளுக்குத் தருகிறாள். சிலருக்குப் புலவு சமைத்துத் தருகிறாள். ஆனால் அதை எல்லாக் குழந்தைகளாலுமே ஜீரணிக்க முடியாது. ஆகவே அவள் வேறு சிலருக்கு வெறுமனே மீனை வேக வைத்துத் தருகிறாள். யாருக்கு எது ஜீரணமாகுமோ அது போலச் சமைத்துத் தருகிறாள். மேலும் சிலர் வறுத்த மீன், மற்றும் சிலர் மீன் சட்டினி போன்ற விதங்களில் விரும்புகின்றனர். (அனைவரும் சிரித்தனர்.) ஒவ்வொருவரும் தமக்கு விருப்பமான வகையில் எடுத்துக்கொள்கிறார்கள்.

ராமருடன் பேசிய அந்த ரிஷிகள் ஞானிகளாக இருந்தனர். எனவே அவர்கள் அகண்ட சச்சிதானந்தத்தை விரும்பினர். ஆனால் பக்தர்களோ அவதாரபுருஷர்களையே விரும்புகின்றனர். பக்தியை அனுபவிக்க அவர்கள் அவ்விதம் அவதார புருஷர்களை நாடுகின்றனர். ஆண்டவனைச் சாட்சாத்கரிக்கும்போது உள்ளத்தைச் சூழ்ந்துள்ள இருள் முழுவதும் விலகிவிடுகிறது. ஸ்ரீராமபிரான் சபைக்குள் நுழைந்தபோது நூறு சூரியர்கள் சபையில் உதித்தது போல இருந்தது என்று புராணம் கூறுகிறது. அப்படியானால் சபையிலிருந்த மக்கள் ஏன் எரிந்து சாம்பலாகவில்லை என்று கேட்கலாம். அதற்குப் பதில்: ஸ்ரீராமரின் அந்தப் பிரகாசம் பௌதிகமான சூரியனின் பிரகாசம் போன்றதல்ல. சூரியன் உதித்தால் தாமரை மலர்கிறது அல்லவா? அது போலச் சபையில் இருந்த எல்லோருடைய இதயத் தாமரைகளும் உடனே மலர்ந்தன.

இவ்விதம் குருதேவர் நின்றுகொண்டே பக்தர்களிடம் பேசிக்கொண்டிருந்தார். பேசும்போதே அவருடைய மனம் ஒரேயடியாகப் புறவுலக நினைவினின்றும் விடுபட்டு உள்முகமாகத் திரும்பியது. 'இதயத் தாமரை மலர்ந்தது' என்ற சொல்லைச்

சொன்னாரோ இல்லையோ உடனே குருதேவர் சமாதி நிலையில் முற்றிலும் ஆழ்ந்துவிட்டார்.

குருதேவர் சமாதிநிலையிலேயே மூழ்கியிருந்தார். இறைவனுடைய தரிசனத்தைப் பெற்று அவருடைய இதயத்தாமரை மலர்ந்துவிட்டது போலும்! அவர் முன்பு நின்றுகொண்டிருந்த அதே நிலையில் புறவுலக நினைவற்றுச் சமாதியில் தோய்ந்திருந்தார். சித்திரத்தில் வரையப்பட்ட ஓர் உருவம் போலவே ஒரே நிலையில் இருந்தார். அவருடைய முகம் ஒளி விசியது. முகத்தில் புன்சிரிப்புத் தவழ்ந்தது. பக்தர்களுள் ஒருசிலர் நின்றுகொண்டும் மற்றும் சிலர் உட்கார்ந்து கொண்டும் இருந்தனர். அவர்கள் அனைவரும் முன்பு எப்போதுமே கண்டிராத ஸ்ரீகுருதேவரின் அற்புதமான இந்தச் சமாதி நிலையைப் பேச்சற்றுத் தரிசித்துக் கொண்டிருந்தார்கள்.

நீண்ட நேரத்திற்குப் பிறகு குருதேவரின் சமாதி கலைந்தது.

அவர் நீண்ட பெருமூச்சு விட்டபடியே 'ராம், ராம்' என்ற திருநாமத்தை மீண்டும் மீண்டும் உச்சரிக்க ஆரம்பித்தார். அவ்விதம் அவர் சொன்ன ஒவ்வொரு சொல்லிலுமிருந்து அமுதம் பொழிவது போல இருந்தது.

பிறகு குருதேவர் உட்கார்ந்துகொண்டார். பக்தர்கள் அவரைச் சுற்றி நான்கு பக்கங்களிலும் அமர்ந்துகொண்டு அவரையே பார்த்தபடி இருந்தனர்.

**ஸ்ரீராமகிருஷ்ணர்** (பக்தர்களை நோக்கி): அவதாரபுருஷர் உலகில் தோன்றும்போது சாதாரண மக்களால் அவரை அறிந்துகொள்ள முடிவதில்லை. அவர் இரகசியமாகவே வந்து போகிறார். அவருடைய அந்தரங்கச் சீடர்களில் ஒரு சிலரால் மட்டுமே அவரை அறிந்துகொள்ள முடிகிறது. ஸ்ரீராமபிரான் பூரணப் பிரம்மமாகவும், மனிதவடிவம் தரித்த பூரண அவதாரமாகவும் விளங்கியதைப் பன்னிரண்டு ரிஷிகள் மட்டுமே அறிந்திருந்தார்கள். மற்ற ரிஷிகளோ அவரிடம், "ஏ ராமா, உன்னை நாங்கள் தசரதபுத்திரன் என்று மட்டுமே அறிவோம்" என்றனர்.

அகண்ட சச்சிதானந்தப் பொருளை அனைவராலுமே அறிந்துகொள்ள முடியுமா என்ன? ஆனால் யார் ஒருவர் நித்திய நிலையை அடைந்த பிறகு, பேரானந்தத்தைச் சுவைக்கும்பொருட்டுத் தெய்விக லீலையாகிய உலகில் தங்கியிருக்கிறாரோ அவர் மட்டுமே பரிபூரண, பழுத்த பக்தியை அடைந்தவர் ஆவார். ஒருவன் முன்பே இங்கிலாந்தின் ராணியை* நேரில் சென்று பார்த்துவிட்டுத் திரும்பி வந்திருந்தால்தான், அந்த ராணியின் பேச்சு, செயல்கள் முதலியவற்றை எல்லாம் வர்ணிக்க முடியும். அப்போதுதான் அந்த வர்ணனைகள் சரியாக அமையும்.

பரத்வாஜர் முதலிய ரிஷிகள் ராமரைத் துதித்து, "ஏ ராமா, நீயே அந்த அகண்ட சச்சிதானந்தப் பொருள் ஆவாய். நீ எங்களிடையே மனித உருவத்தில் அவதரித்திருக்கிறாய். உண்மையில் நீ உன் மாயையை வசப்படுத்திக்கொண்டு மனித வடிவில் காணப்படுகிறாய்" என்று கூறினர். பரத்வாஜர் முதலிய ரிஷிகள் ராமபிரானின் பரம பக்தர்களாக விளங்கினார்கள். அவர்களுடைய பக்தி பழுத்த பக்தி ஆகும்

உணவு உட்கொண்ட பிறகு குருதேவர் சிறிய கட்டிலின்மீது சற்று ஓய்வு எடுத்துக்கொண்டார். அறையில் சிறிது சிறிதாக மக்களின் கூட்டம் பெருகிக்கொண்டிருந்தது.

வெளி வராந்தாக்களிலும் மக்கள் நிறைந்திருந்தார்கள். அறையில் குழுமியிருந்த பக்தர்கள் தரை மீது உட்கார்ந்து குருதேவரையே பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

வைஷ்ணவ கோசுவாமி ஒருவரும் அந்த அறையில் உட்கார்ந்திருந்தார். குருதேவர் அவரைப் பார்த்தபடி மற்றப் பக்தர்களிடம் பேச ஆரம்பித்தார். கோசுவாமிகளைக் கண்டாலே குருதேவர் தலையைத் தாழ்த்தி வணக்கம் செய்வது வழக்கம். சில சமயங்களில் நேருக்கு நேராக அவர்களைப் பார்க்க நேர்ந்தால் அவர்களின் முன்பு சாஷ்டாங்க நமஸ்காரமும் செய்துவிடுவார்.

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** நல்லது. நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? உய்வதற்கு எது வழி?

**கோசுவாமி:** ஐயா, பகவானின் திருநாமத்தை உச்சரிப்பதே போதுமானது. கலியுகத்திலே நாம ஜபத்திற்கு அளவற்ற மகிமை இருப்பதாகச் சாஸ்திரங்கள் வற்புறுத்திக் கூறுகின்றன.

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** ஆம். பகவானது நாமத்தின் புனிதத்தன்மையைப் பற்றி எந்த ஒரு சந்தேகமும் இல்லை. ஆனால் நாமம் மட்டுமே போதுமா? கடவுளிடம் ஆழ்ந்த பற்று இல்லாத

---

* விக்டோரியா மகாராணி

போது, அது என்ன பயனைத் தரும்? கடவுளுக்காக ஏங்கி ஏங்கி மனம் துடிதுடிப்புக் கொள்ளவேண்டும். வெறுமனே ஆண்டவனின் நாமத்தை உச்சரிக்கிறார்கள். ஆனால் மனமோ காமினி காஞ்சனத்தில் பற்றுக் கொண்டிருக்குமானால் அதனால் என்ன பயன் ஏற்படும்?

தேளோ குளவியோ கொட்டிவிட்டால் வெறுமனே மந்திரத்தை ஓதினால் மட்டும் பயன் ஏற்படாது. அதோடு எரியும் வறட்டியின் புகையையும் கொட்டிய இடத்தின்மீது படும்படி செய்ய வேண்டும்.

**கோசுவாமி:** அப்படியானால் அஜாமிளனைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்? அஜாமிளன் பெரும் பாதகன். அவன் செய்யாத பாவம் இல்லை. ஆனால் மரணத்தறுவாயில் அவன் 'நாராயணா' என்று தன் மகனைக் கூப்பிட்டான். அது காரணமாக அவனுக்கு நற்கதி கிடைத்தது.

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** ஒருவேளை அஜாமிளன் முற்பிறவிகளில் பல புண்ணியச் செயல்களைச் செய்திருக்கக் கூடும். மேலும் அவன் ஒரு சமயம் தவம் செய்தான் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

அதையே இப்படி வேறு விதமாகவும் சொல்லலாம்: அவன் நாராயணன் பெயரைச் சொன்ன போது அதுவே அவனுடைய கடைசிக் காலமாக இருந்தது என்றும் சொல்லலாம். யானையைக் குளிப்பாட்டி அப்படியே விட்டுவிட்டால் என்ன ஆகும்? அது மறுபடியும் தலையில் மண்ணைப் போட்டுக் கொண்டு முன்போலவே அசுத்தமாக இருக்கும். ஆனால் யானை மண்டபத்திற்குள் அதை அனுப்புவதற்கு முன்பு அதனுடைய அழுக்கைப் போக்கித் துடைத்துக் குளிப்பாட்டி விட்டால் அது பரிசுத்தமாகவே இருக்கும். யானையைக் குளிப்பாட்டி மண்டபத்திற்குள் அனுப்புவதைப் போல, அஜாமிளன் மீண்டும் பாவம் செய்ய இயலாத வகையில் நாராயணா என்று சொன்னபோது அது அவனுடைய அந்திம காலமாக இருந்தது என்றும் சொல்லலாம்.

பகவானது புனிதநாமத்தை ஓதி ஒருவன் பரிசுத்தம் அடைந்ததாகவும், ஆனால் அதன் பின்பு உடனே அவன் பல பாவச் செயல்களில் ஈடுபட்டு விடுவதாகவும் வைத்துக்கொள்வோம். அப்படிப் பட்டவனிடம் மன உறுதி இல்லை; அவன் 'நான் இனிமேல் பாவம் செய்ய மாட்டேன்' என்ற பிரதிக்ஞை எடுத்துக்கொள்வதில்லை. கங்கையில் குளிப்பதனால் ஒருவனுக்கு எல்லாப் பாவங்களும் போய்விடும் என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால் அதனால் என்ன பிரயோஜனம்? அவன் குளிக்கும் போது கங்கைக் கரையிலுள்ள மரக்கிளைகளின் மீது அவனுடைய எல்லாப் பாவங்களும் உட்கார்ந்திருக்கின்றன என்று மக்கள் சொல்கிறார்கள். அவன் குளித்துவிட்டு வெளியே வந்தானோ இல்லையோ, உடனே அந்தப் பழைய பாவங்கள் முழுவதும் மரக்கிளைகளிலிருந்து அவன் தோளின் மீது குதித்து அவனைப் பிடித்துக்கொள்ளுகின்றன. (எல்லோரும் சிரித்தனர்.)

ஆதலால் நான் சொல்வதாவது: ஆண்டவனுடைய நாமத்தையும் ஜபித்து வாருங்கள்! அதோடு அவரிடம் பக்தி ஏற்பட வேண்டும் என்றும் அடிக்கடி அவரிடம் பிரார்த்தனையும் செய்யுங்கள்; செல்வம், புகழ், உடல் இன்பங்கள் ஆகிய இவையெல்லாம் இரண்டொரு நாள் மட்டுமே இருக்கக் கூடியவை. இந்த அநித்தியப் பொருள்களின் மீது உள்ள பற்று நாளுக்கு நாள் குறைந்து வர வேண்டும் என்று பகவானிடம் பிரார்த்தனை செய்யுங்கள். **



நல்லொழுக்கம் இல்லாதவனை வேதம் புனிதமாக்கிவிடாது.

—வசிஷ்டர்

உன்னை நீ அறிவாயாகில் உனக்கொரு கேடுமில்லை.

—கைவல்ய நவநீதம்

எனக்கு வேறு ஒரு வழியும் தென்படவில்லையானால் நான் உடனே முழந்தாளிட்டுக் கடவுளைப் பிரார்த்தனை செய்ய ஆரம்பிப்பேன். என் அறிவோ, என்னைச் சுற்றி இருந்தவர்களின் அறிவோ என்னைக் காப்பாற்றும் என்று நான் என்றும் கருதியதில்லை.

—ஆபிரகாம் லிங்கன்




## சாந்தி நிலவுக!

இறைவனின் திருவருளைப் பக்தி பூர்வமாக வேண்டிப் பிரார்த்தித்து 'விஜயம்' தனது 59-ஆம் ஆண்டில் அடியெடுத்து வைக்கிறது.

வாசகர்களாகிய பேரன்பிற்குரிய ஆன்மிகச் சகோதர சகோதரிகள் அனைவருக்கும் விஜயம் தனது ஆழ்ந்த அன்பையும் புத்தாண்டு-பொங்கல் வாழ்த்துக்களையும் தெரிவித்துக்கொள்கிறது. நான்கு திசைகளிலும் அனைவரின் வாழ்க்கையிலும் அன்பும் மகிழ்ச்சியும் பெருகட்டும். மங்களம் தங்கட்டும்.

ஸர்வேஷாம் ஸ்வஸ்திர் பவது.
ஸர்வேஷாம் சாந்திர் பவது.
ஸர்வேஷாம் பூர்ணம் பவது.
ஸர்வேஷாம் மங்களம் பவது.
ஸர்வே பவந்து ஸுகிந:
ஸர்வே ஸந்து நிராமயா: |
ஸர்வே பத்ராணி பச்யந்து,
மா கச்சித் து:கபாக் பவேத் ||

''அனைவருக்கும் மங்களம் உண்டாகட்டும். அனைவருக்கும் அமைதியும் நிறைவும் உண்டாகட்டும். அனைவரும் நோயற்று இன்ப வாழ்வு வாழட்டும். அனைவரும் நட்புடன் இருக்கட்டும். எங்கும் துன்பம் ஏற்படாதிருக்கட்டும்.''

* * *

மனம் தர்மத்தில் செல்லும்பொழுது அது சாந்தியில் நிலைபெறுகிறது. அதர்ம வழிச் சிந்தனைகளே அசாந்திக்கும் அல்லல்களுக்கும் காரணமாகின்றன. உண்மையான மன அமைதியை, நடைமுறையில் மதத்தை உண்மையாகவே அனுஷ்டிக்கும்போதுதான் பெற முடியும். 'தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால் மனக்கவலை மாற்றல் அரிது' என்னும் குறள் மன அமைதிக்கு உள்ள ஒரே வழியை இரத்தினச் சுருக்கமாக உணர்த்துகிறது.

வறுமை, பண்டைய சிறப்புப் பொருந்திய பண்பாடுகளைத் தகர்க்கும் சக்திகள், நாத்திக மனப்பான்மை, இவற்றையெல்லாம் உரமாகப் பயன்படுத்தி வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுவதைப் போன்று ஊடுருவி வளரும் பிற மதக் கருத்துக்கள், மதமாற்றங்கள்—இத்தனைக்கும் இடையில் இந்து மதம் இருக்க வேண்டியுள்ளது. 'மதமே இந்தியாவின் உயிர்நாடி' என்பதை யுகநாயகராகிய சுவாமி விவேகானந்தர் மீண்டும் மீண்டும் அயராமல் வலியுறுத்தினார். சமுதாயத்தில் தலைவராக உள்ளவர்கள், சமுதாயத்தின் முதுகெலும்பாக விளங்கும் மதத்தைப் பொருட்படுத்தத் துளியும் தயாராக இல்லையே! நிலைமை இவ்விதமே நீடிக்குமானால் இந்தியாவிற்கு அழிவு நேருவதை எது தடுத்து நிறுத்த முடியும்? பூகோளரீதியாக, ஸ்தூலமாக இந்தியா அழியாமல் இருக்கும் என்பது உண்மைதான். ஆனால் பண்டைய பண்பாடுடைய மக்கள் இருக்க மாட்டார்கள். அதற்கு மாறான, சான்றோர் ஒப்ப மறுக்கும் புதுவித மக்களே இருப்பார்கள்.

சமுதாயம் என்று எடுத்துக்கொண்டால் மதிக்கவும் பாதுகாக்கப்படவும் வேண்டிய பண்பாடுகள் புறக்கணிக்கப்படுகின்றன. மலிவான விலையில் கொடிய நஞ்சுகள், தரமற்ற பத்திரிகைகளாகவும் புத்தகங்களாகவும் திரைப்படங்களாகவும் இன்னும் பலவேறு விதங்களிலும் புற்றீசல்கள் போல் நாளும் பெருகிப் பவனி வருகின்றன. இவை உத்வேகத்துடன் போட்டி போட்டுக்கொண்டு மக்கள் மனதைப் பாழ்படுத்தி வருகின்றன. இவை உருவாக்கி வரும் சூழ் நிலைகளையும் எதிர்காலச் சமுதாயத்தையும் நினைக்கும்போது நல்ல உள்ளங்கள் அஞ்சவே செய்யும். 'நெஞ்சு பொறுக்குதில்லையே இந்த நிலை கெட்ட மாந்தரை நினைத்துவிட்டால்' என்ற

பாரதியின் பாடல் இன்றுதான் எழுதப்பட்டதைப் போல அவ்வளவு பொருத்தமாக அல்லவா இருக்கிறது!

நாகரிகம் என்ற பெயரில் ஆடம்பரச் செலவுகள், கடன் வாங்கியாவது செலவு செய்வது என்ற நிலைமைகள் நாளும் பெருகி வருகின்றன. இந்த நிலையில் விலைவாசி ஏன் ஏறாது? படித்த இளைஞர்கள் 'உடல் வருந்தி உழைப்பதே தவறு' என்பது போலக் கூசி நிற்கிறார்கள். 'விரலில் அழுக்குப் படாமல் வாழ வேண்டும்' என்று எண்ணும் நிலைக்கு வந்துகொண்டிருக்கிறார்கள். உழைக்காவிட்டால் தனி மனிதனோ சமுதாயமோ உயர்வு பெற முடியுமா? வெவ்வேறு விதமான கல்வி, கைத்தொழில் என்று இல்லாமல், ஒரே விதமான கல்வியைப் பெறுவதனால் வேலையின்மைப் பிரச்னையும் பிணியாகச் சமுதாயத்தைப் பிடித்திருக்கிறது. 'எப்படி வேண்டுமானாலும் பணம் சேர்க்கலாம்' என்ற மனநிலை யுக தர்மம் போலப் பரவி வருகிறது. 'நாய் விற்ற காசு குரைக்காது' என்பது தவறு. பணமே வாழ்க்கை ஆகிவிடுமா? பணம் குறுகிய காலத்திய இந்த உலகத்தோடு சரி; இறந்தாலும் என்றென்றும் நம்மைப் பின்தொடர்வது நாம் அனுஷ்டிக்கும் தர்மம் ஒன்றே ஆகும்.

அபூர்வமாகத் தர்மாத்மாக்கள் இருக்கிறார்கள் என்பது உண்மைதான். அப்படிச் சிலராவது இருப்பதனால்தான் வானம் பெய்கிறது. பூமி விளைகிறது.

வேதகாலம் முதல் விவேகானந்தர் காலம் வரையிலும் தெய்வத்திற்கு நிகராக வாழ்ந்த மகான்கள் எத்தகைய வாழ்க்கை அமைவது தனி மனிதனுக்கும் சமுதாயத்திற்கும் உண்மையான நன்மையைத் தரும் என்பதைத் தம் தம் வாழ்வினாலும் வாக்கினாலும் உணர்த்தியிருக்கிறார்கள். அவர்களுடைய ஆன்மிகக் கண்ணோக்கத்தில் அமையும் நவீன சமுதாயத்தில் உயர்ந்த பண்பாடுகள் தாமாக மலர முடியும். சமுதாயம் அப்படி மாறுவது நம் கையில் இல்லை. ஆனால் தனி மனிதன் என்னும் முறையில் நம்மை நாம் மாற்றிக்கொள்ள முடியும்; அந்த வகையில் ஒருசிலருக்காகிலும் உதவி செய்யவும் முடியும்.

உலகில் பல மதங்கள், மதப் பிரிவுகள், பெரியோர், விவேகிகள், சான்றோர் தோன்றியுள்ளனர். அவர்களில் ஒருவராவது, ஒரு சாஸ்திரமாவது, "வாழ்க்கையின் முதலும் முடிவும் இந்த உலகம்தான்; இந்த உலகத்தோடே எல்லாம் ஆயிற்று; இந்த உலகமே எல்லாம்; இந்த உலக இன்பமே எல்லாம்" என்று சொன்னது கிடையாது. அவர்களின் உபதேசங்களின் சாரமெல்லாம், "இந்த உலக வாழ்வு அநித்தியம் என்பதைத் தெளிவாக, மிகமிகத் தெளிவாக மனதில் பதிய வைத்துக்கொள்ளுங்கள். இந்த உலகில் இன்பம் என்று சொல்லப்படுவது அவ்வளவுமே மிக மிக அற்பமானது; ஆத்ம சாட்சாத்காரம் ஒன்றினால் மட்டுமே தெய்விகமான பரிபூரணப் பேரின்பத்தைப் பெற முடியும். இந்த உலகம் ஓர் உடற்பயிற்சிச்சாலை போன்றது; இதில் நம்மை நாம் ஆன்மிக வலிமை கொண்டவர்களாக ஆக்கிக் கொள்வதற்காகவே வந்திருக்கிறோம். எனவே அதற்கு இயைந்த முறையில் ஆன்மிகச் சாதனையுடன் கூடிய நேர்மை, பரோபகாரம், பரஸ்பர அன்பு போன்ற தார்மிகப் பண்புகளுடன் வாழ்ந்து, அரிதில் பெற்ற மானிடப் பிறவியைப் பயனுடையதாக ஆக்கிக்கொள்ளுங்கள்" என்பதாகவே அமைந்திருக்கிறது.

'மக்களின் மனம் அதர்மத்தில் செல்வதனால்தான் நாட்டில் புயலும் வெள்ளமும் உண்டாகின்றன' என்று சொல்லப்படுவதிலும் பொருள் இல்லாமலில்லை.

ஒழுக்கம்தான் மனிதனுக்கு மனநிறைவைத் தரும், வலிமையைத் தரும். 'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்பதைப் போல, நமது இம்மை வாழ்க்கை மறுமையின் நலன்களை உணர்த்தும் வகையில் தார்மிகப் பண்புகளுடன் திகழ முயற்சி செய்ய வேண்டும்.

இறைவன் நமது குற்றங்களை மன்னிப்பதைப் போலப் பிறர் குற்றங்களை நாம் மன்னிக்கப் பழகுவோமாக. அல்லல் நிறைந்த, நரகம் போன்ற இந்த உலக வாழ்க்கையில் பிறருக்கு ஆறுதலும் அமைதியும் தருவதாக நமது வாழ்க்கை அமைவதாகுக. பிறருக்கு அன்பும் ஆறுதலும் தரும் வகையில் அமையும் வாழ்க்கையே உண்மையில் வாழ்க்கை என்று சொல்லத் தக்கது; பிறவெல்லாம் போலி வாழ்க்கையே ஆகும்.

"மனிதர்களை உருவாக்குவதுதான் நம் இலட்சியம். அரசியல் கொள்கைகளுக்கு முன்னால் ஆன்மிகக் கருத்துக்களைப் பரப்புங்கள்; இந்தியாவின் ஆன்மிக விழிப்பே உலகின் விழிப்புக்கு அடிகோலும். நவீன விஞ்ஞானத்துடன் இணைந்த நடைமுறை வேதாந்தமே இந்தியாவிற்கு இப்போது தேவை. எதிர்கால இந்தியாவின் வருகை இப்போதைய உங்கள் பணியையே பொறுத்திருக்கிறது. பொறுப்பு முழுவதும் உங்கள் தோள்மீதே உள்ளதாக எண்ணிச் செயற்படுங்கள். பொதுநலத்திற்காக நம்மைத் தியாகம் செய்ய வேண்டும் என்னும்

பண்பு நம்மிடையே இன்னும் வளராமலேயே இருக்கிறது; அது வளர்ந்தோங்க வேண்டும். துறவும் தொண்டும்தான் இந்தியாவின் இலட்சியங்கள். அவற்றை இரு கண்களாக நாம் போற்றிப் பாதுகாக்க வேண்டும். நாம் பிறந்து வாழ்ந்ததற்கு அறிகுறியாக ஆக்கபூர்வமாக எதையாவது விட்டுச் செல்ல வேண்டும். செய்து முடிக்க வேண்டிய பணிகளோ மிக ஏராளமாக நம்முன் இருக்கின்றன; எனவே பூசல்களை விட்டு ஆக்கபூர்வமான பணிகளில் ஈடுபடுவோமாக'' என்ற ரீதியிலான பல கருத்துக்களை, சுவாமி விவேகானந்தர், பல கோணங்களிலும் நமக்கு வழங்கியுள்ளதைப் புதிய ஆண்டின் நுழைவாயிலில் விஜயம் நினைவுபடுத்துகிறது.

வரலாற்று நாயகர்களாக விளங்கிய மகரிஷிகள் காட்டிய சீரிய பண்பாடுகளைப் பேணி வளர்ப்பதில் ஒவ்வோர் இந்தியனும் பங்கேற்க வேண்டும். 'இவர் செய்யட்டும், அவர் செய்யட்டும்' என்று இருத்தல் கூடாது. ஒவ்வொருவரும் இயன்றதைச் செய்ய முடியும், செய்ய முன்வர வேண்டும்.

'பாரதநாடு பழம்பெரு நாடு; நீரதன் புதல்வர் இந்நினை வகற்றுதீர்' என்பது கவியின் வாக்கு. 'பழம் பெருநாடு' என்பதற்குக் குறைவு வராதபடி 'நாம் இந்தியர், நாம் இந்துக்கள்' என்பதை நினைவில் இருத்தி, ஸ்ரீராமபிரான் சேது சமைத்தபோது அணில் செய்த சிறு உதவியைப் போலாகிலும் மதத்திற்கும் நாட்டுக்கும் நம்மால் இயன்றதைச் செய்வோமாக.

தெய்வத்திற்கும் தேசத்திற்கும் தொண்டு புரிந்த உண்மைத் தியாகிகளை நினைவு கூர்வோம். அந்தத் தியாக மலர்களிலே ஒரு மலராக விளங்க இறைவனின் திருவருளை வேண்டிப் பிரார்த்திப்போமாக.

எளிய வாழ்க்கையும் உயர்ந்த சிந்தனைகளும் கூடிய ஆரோக்கிய சமுதாயம் நம்மிடையே அமைவதாகுக.

தார்மிக வாழ்க்கையில் மேலும் மேலும் நமக்குப் பிடிப்பு ஏற்பட இறைவன் அருள் புரிவாராக.

குறுகிய எண்ணங்கள் நீங்கி, எல்லா விதத்திலும் பரந்த மனப்பான்மை நம்மிடையே வளர்ந்தோங்குவதாகுக. புதிய ஆண்டு பூசல் அற்றதாக, அமைதி நிறைந்ததாக, ஆனந்தம் தருவதாக விளங்க இறைவன் திருவருள் பாலிப்பாராக.

* * *




சிவபெருமானே! புத்திக்கு எட்டாத தெய்விக மகிமையுடைய உன்னை எப்படித் தியானிப்பேன்? தேவர்களுள் முதல்வனே! என் தலைவனே! அங்கிங்கெனாதபடி எங்கும் வியாபித்திருக்கும் உன்னைக் குறிப்பிட்ட எந்த இடத்திலிருந்து அழைத்து எழுந்தருளச் செய்ய முடியும்?

சிவபெருமானே! எல்லா இடங்களையும் ஆசனமாகக்கொண்டு அமர்ந்திருக்கும் உனக்கு எவ்வளவு பெரிய ஆசனம் அமைக்க வேண்டும்? எல்லாப் பக்கங்களிலும் கைகால்களை உடையவனுக்குப் பாத்தியமோ அர்க்கியமோ (திருவடிகளைக் கழுவ நீரோ கையில் வார்க்கும் நீரோ) எப்படிச் சமர்ப்பிக்க முடியும்?

பகவானே! எல்லாப் பக்கங்களிலும் வாய்களையுடைய உனக்கு ஆசமனம் (மந்திரத்தை உச்சரித்து நீர் அருந்துதல்) எப்படி அமையும்? மதுவை (மது என்னும் அரக்கனை)ப் பகைத்த விஷ்ணுவுக்கு அருள்புரிந்த உனக்கு மதுபர்க்கம் (தேன், நெய், தயிர், கற்கண்டு ஆகியவற்றைக் கலந்தளிக்கும் பானம்) எப்படிப் பொருந்தும்?

—ஸ்ரீசதாசிவப் பிரம்மேந்திரர்
(சிவ மானஸிக பூஜை)

பரமபுருஷரே! நீரே இந்த உலகிற்கு ஆதியாவீர், இந்த உலகமுமாவீர், இந்த உலகிற்கு ஆதாரமுமாவீர்; பொருள்களில் ஏற்படும் விகாரங்களால் மாறுபாடு அடையாதவராக விளங்குகிறீர்.

ஆகாயத்தைப் போல, இந்த உலகின் உள்ளும் புறமும் பரவியும் நீர் மாசற்று விளங்குகிறீர். நீர் பற்றற்றவர், அசைவற்றவர், நித்தியமானவர், தூய அழிவற்ற ஞானமும் உண்மைப் பொருளும் ஆவீர்.

நான் எங்கே இருந்தாலும், இறைவரே! உமது பாததாமரையின் மீது சலியாத பக்தி எப்போதும்

எனக்கு வாய்ப்பதாக! அனைவருக்கும் நாதரே, பக்தவத்சலரே, ஹிஷிகேசரே, நாராயணரே, உமக்கு வணக்கம்!

—அத்யாத்ம ராமாயணம் 1, 52, 56, 58, 59

உமக்கு நிறமோ வடிவமோ ஆயுதங்களோ ஒரு குறிப்பிட்ட உறைவிடமோ இல்லை; ஆயினும் உமது அன்பர்களுக்கு ஒரு புருஷ வடிவத்தோடு விளங்குகிறீர்.

உமது காட்சிக்கு நேரே விளங்காததாக எதுவுமே இல்லை; ஆயினும் தாங்கள் யாருடைய காட்சிக்கும் விளங்குபவராக இல்லை. தங்களால் அடையப் படாதது எதுவுமில்லை; என்றாலும் தங்களை அடைபவர் எவருமில்லை.

நீரே அனைத்திற்கும் மூலகாரணம் என்பதையும், மொழிகளால் உணர்த்தப்படுவனவற்றுள் மிகவும் உயர்ந்த பொருள் என்பதையும், மேலான யோகங்களின் முடிவிடம் என்பதையும் ஞானிகள் அறிவர்.

ஜகந்நாதரே! உண்மையான பக்தர்களிடம் வாத்சல்யம் கொண்டவரே! நான் ஓர் அனாதை, பாக்கியம் இல்லாதவன், அடைவதற்கு உரிய உறுதிப்பொருளை அடையாதவன்; என்னை உமது கருணையால் காத்தருள்வீராக.

—ஜிதந்தே ஸ்தோத்திரம் 1, 5, 7; 11-10

பிரபுவே, நீர் உருவம் இல்லாதவர், ஆனால் எனது தியானத்தில் உம்மை உருவத்தோடு கூடியவராகப் பாவித்திருக்கிறேன்; நீர் வாக்குக்கு எட்டாதவர், ஆனால் நானோ உம் மீது தோத்திரங்கள் பாடியுள்ளேன். நீர் எங்கும் பரந்திருப்பவர், ஆனால் நானோ பல தலங்களுக்கும் யாத்திரை செய்திருக்கிறேன். என்மீது கருணை கூர்ந்து, என் தோஷங்களாகிய இம் மூன்றையும் மன்னித்தருள்வீராக!

—வியாசரின் பிரார்த்தனை (பாகவதம்)

எனது உடல் தூயதாகுக. நான் அழுக்கும் பாவமும் நீங்கியவனாகுக. தெய்விக ஜோதியாக என்னை உணர்வேனாக. எனது உள்ளம் தூயதாகுக. அழுக்கும் பாவமும் நீங்கியவனாகுக. தெய்விக ஜோதியாக என்னை உணர்வேனாக. எனது ஆன்மா சாந்தியடைவதாக. நான் அழுக்கும் பாவமும் நீங்கியவனாக. திவ்ய ஜோதியாக என்னை உணர்வேனாக.

—தைத்திரீய ஆரண்யகம்

இன்பத்தையும் நன்மையையும் அளிக்கும் தங்களை வணங்குகிறேன். நலத்தையும் மங்களத்தையும் வளர்ப்பவராகிய தங்களை வணங்குகிறேன். ஆனந்தத்தையும் இன்னும் மிக்க ஆனந்தத்தையும் அருள்பவராகிய தங்களை வணங்குகிறேன். தாங்கள் பிறவிக்கடலுக்கு அப்பால் இருக்கிறீர்கள்; அதன் நடுவிலேயும் இருக்கிறீர்கள். தோத்திரங்கள் வாயிலாக ஒருவர் பாவத்தைத் தாண்டிச் செல்லும் படி அருள் புரிகிறீர்கள்; ஞானத்தின் வாயிலாகப் பிறப்பிறப்புச் சுழலிலிருந்தும் ஒருவரை விடுவிக்கிறீர்கள்; தீர்த்தங்களிலும் கரைகளிலும் தாங்கள் இருக்கிறீர்கள். கடற்கரையிலுள்ள இளம்புல்லிலும் நுரைக்கும் அலைகளிலும் தாங்கள் இருக்கிறீர்கள். தங்களை நான் வணங்குகிறேன்.

—சுக்ல யஜுர்வேதம்

தீயிலும் நீரிலும் இருப்பவரும், உலகம் முழுவதும் பரந்துள்ளவரும், மூலிகைகளிலும் மரங்களிலும் இருப்பவருமாகிய பரம்பொருளுக்கு எனது வணக்கம்.

தேவர்களைப் படைத்துக் காப்பவரும், இரணிய கர்ப்பரை (உலகம் எங்கும் பரந்த சைதன்யத்தை)ப் பிறப்பித்தவரும், தம்மிடம் ஈடுபாடு கொண்ட அன்பர்களின் பாவத்தையும் துயரத்தையும் நீக்கி, விதிகளை மீறும்போது தண்டனைக்கு உள்ளாக்கிப் பேரின்பமும் மெய்ஞ்ஞானமும் அருளுபவரும், அனைத்தையும் காண்பவரும் அனைத்திற்கும் முதல்வரும் ஆகிய இறைவன் நமக்கு நல்ல நினைவுகளைக் கொடுத்தருள்வாராக.

வேதங்களை வெளிப்படுத்தி எல்லா உயிர்களுக்கும் மங்களம் அருள்பவரே! பயத்தையும் பாவத்தையும் போக்கும் உமது சாந்தமான மங்கள வடிவத்தினால் எங்களுக்கு ஆனந்தத்தை அருள்வீராக.

வேதங்களை அருளுபவரே! எய்வதற்காக உங்கள் கரத்தில் நீங்கள் வைத்துள்ள அம்பை (அம்பை—பிரணவம் போன்ற தாரக மந்திரத்தை; இத்தகைய மந்திரங்களைத் தியானிப்பவர்களுக்கு இறைவன் தன்னைக் காட்டியருள்கிறான்.) மங்களகரமாக்கி அருள்வீராக. அன்பர்களைக் காப்பவரே! ஜகதாகாரமான தங்களின் திவ்ய வடிவத்தை அழியாதிருப்பீராக.

—சுவேதாச்வதார உபநிஷதம்

# சூரிய வழிபாடு

பிரம்மசாரி முத்துக்குமார்

தொன்மையான கலாசாரம் கொண்ட எல்லா நாடுகளிலும் சூரிய வழிபாடு மிகவும் முக்கியத்துவம் பெற்றிருக்கிறது. உலகம் முழுவதிலுமே உள்ள மக்கள் சூரியனைப் புனித உணர்வுடன் கருதி வந்துள்ளனர். குறிப்பாக, பண்பாடு, ஆன்மிக ஞானம், வெளிஉலக அறிவு ஆகியவற்றின் தொட்டிலாக விளங்கிய ஆசிய ஐரோப்பிய நாடுகளில் சூரிய வழிபாடு பெரிதும் வளர்ச்சியுற்றிருந்தது. ஆனால் ஆன்மிக ஞானத்தின் தாயகமாகிய இந்தியாவில்தான் சூரிய வழிபாடு நிலையான மதமாக உருப்பெற்று, ஒரு மதத்திற்குத் தேவையான இலக்கியங்கள், புராணங்கள், சாஸ்திரங்கள் முதலியவற்றைக் கொண்டதாக விளங்குகிறது.



மிகவும் பழமையான ரிக்வேதத்தில் மித்திரன் (சூரியன்) பல பெயர்களாலும் உருவங்களாலும் போற்றப்பெறுகிறான். வேதங்களில் சூரியன், கோள்கள், நட்சத்திரங்கள் ஆகியவை பற்றிய தகவல் இல்லாமல் இருந்திருந்தால் வேதத்தின் பழம் பெருமையும் பேரறிவும் மிகவும் குறைந்தனவாகவே கருதப்பட்டிருக்கும்.

சூரிய வழிபாட்டிலிருந்தே விஷ்ணு வழிபாடு தோன்றியது. எனவே வைணவத்திற்கும் சூரியன் ஒருவிதத்தில் மூல காரணமாவான். சூரிய நாராயணனை வழிபடுவது இப்போதும் வழக்கத்தில் உள்ளது.

வேதங்களில் பல இடங்களிலும் சூரியனும் அவனுடன் சம்பந்தப்பட்ட வாயுவும் அக்கினியும் போற்றப்பெறுகிறார்கள். வேதமரபையொட்டிய வழிபாடுகளிலும் வைதிக இந்துக்களின் காலை மாலை வழிபாடுகளிலும் சூரியக் கடவுளின் முக்கியத்துவத்தைக் காணலாம். சூரியனோடு தொடர்புடைய பருவங்கள், சூரியனின் நிலை முதலியவற்றைப் பொறுத்தே பண்டைநாளில் வேதவேள்விகள் நடைபெற்று வந்துள்ளன. காலங்களின் மாறுதலுக்குச் சூரியன் காரணமாக இருப்பதனால் அவனை வருஷத்தின் கடவுள் என்று அழைத்தார்கள். "வேள்விகள் அனைத்துக்கும் உரிய எல்லாக் காரியங்களையும் செய்து முடிக்கும் சூரியதேவன் உயர்ந்த ஒளியினால் பிரகாசிக்கிறான்" என்று ஆதிசங்கரர் தமது சாந்தோக்ய உபநிஷத் பாஷ்யத்தில் குறிப்பிட்டுள்ளார்.

ரிக்வேதத்தில் சூரிய மண்டலத் தேவர்களைக் குறித்து 133 ரிக்குகளும், இரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட குறிப்புக்களும் உள்ளன. சூரியன், மித்திரன், ஸவிதா, பூஷா, விஷ்ணு, விவஸ்வான், ஆதித்தியன், அர்யமா, பகன், ஹம்சன், தக்ஷன், உஷஸ், அச்வினிதேவர் என்றெல்லாம் சூரியமண்டலத் தேவர்களை வேதம் போற்றுகிறது.

வேதத்தில் சூரியனும் வருணனுமே மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த தெய்வங்களாகக் கருதப்பெறுகிறார்கள். அவர்கள் இருவரும் ஒரே தெய்வத்தின் இரு வேறு அம்சங்களாவர். ரிக்வேதம், "சூரிய தேவனின் எங்கும் நிறைந்த ஒளிமிகுந்த பொற்கரங்கள் உலகின் கொடிய நோய்களை நீக்குகின்றன" என்று குறிப்பிடுகிறது.

அதர்வவேதம் சூரியனை இமைமூடாத விழிப்புள்ள உலகின் காவலனாகவும், மக்களுக்கு நல்லுபதேசம் செய்பவனாகவும் வர்ணிக்கிறது. அவனுடைய கண் மனிதனுக்கு நீண்ட ஆயுளையும் சுகத்தையும் எல்லா மங்களங்களையும் கொடுப்பதாகவும் அது கூறுகிறது.

"சூரியகிரணங்களின் வெப்பம் மழையை உண்டாக்குகிறது. மழையினால் தாவரங்களும், தாவரங்களிலிருந்து உணவும், உணவிலிருந்து வாழ்வும்

பொங்கல் திருநாளை முன்னிட்டு ஞாயிறு வணக்கம் பற்றிய இந்தக் கட்டுரை இடம் பெறுகிறது. இந்து மதத்திற்கு மட்டுமல்ல, உலகிலுள்ள எல்லா மதங்களுக்குமே சூரிய வழிபாடுதான் ஆதாரமாக இருந்திருக்கிறது.

வலிமையும் அவற்றைத் தொடர்ந்து நம்பிக்கை, அறிவு, சிந்தனை, மனவளர்ச்சி, சாந்தி, ஞாபகசக்தி, ஞானம், ஞானத்திலிருந்து நித்தியானந்தமும் எல்லாவற்றிற்கும் மூலமுமாகிய பிரம்மமே எய்தப்பெறுகிறது'' என்று தைத்திரிய ஆரண்யகம் குறிப்பிடுகிறது. அதே ஆரண்யகம், ''ஆதித்தியன் தேஜோமயமானவன், சக்திமான், புகழ்ச்சிக்கு உரியவன், பார்ப்பதற்கும் கேட்பதற்கும் எது மூலமாக இருக்கிறதோ அதுவாகவே இருப்பவன்'' என்று வர்ணித்திருக்கிறது. சூரியனைப் பிரம்மமாகவே தியானிப்பதனுல் எல்லா நன்மைகளையும் பெறுவதுடன், அந்தத் தியானத்தினுலேயே தியானிப்பவன் பிரம்மமாக ஆகிவிடலாம் என்று சூரிய வழிபாட்டின் உச்ச நிலையைத் தைத்திரிய ஆரண்யகம் கூறுகிறது.



சூரியன், சூரிய மண்டல ஒளி, அதன் சக்தி ஆகியவை ஒலிச்சக்தியுடன் (Vak or Sonant Energy) தொடர்புடையன. ஒரே ஜோதி ஒலிச் சக்தியாகவும் சூரிய மண்டலச் சக்தியாகவும் விளங்குகிறது. 'சூரியனே ரிக் யஜுஸ் ஸாமம் ஆகிய மூன்று வேதங்களாக ஆகியிருக்கிருன். மூன்று வேதங்களே சூரியனுடைப் பிரகாசிக்கின்றன' என்று பண்டைய இந்துக்கள் கருதினுர்கள்.

சூரியதாபினி உபநிஷதம் சூரியனையே மேலான பரதேவதையாகக் குறிப்பிட்டுச் சூரிய உபாசனை முறைகளை விவரிக்கிறது. மித்திரன், ரவி, சூரியன், பகன், ககன், பூஷா, ஹிரண்யகர்ப்பன், மரிசி, ஆதித்தியன், ஸவிதா, அர்க்கன், பாஸ்கரன் என்ற சூரியனின் பன்னிரண்டு அம்சங்களைப் பற்றியும் அது பேசுகிறது.

சூரியனின் அர்யமா, மித்திரன் என்ற பெயர்கள் நண்பன் என்பதையும், பகன் என்னும் பெயர் அதிர்ஷ்டங்களையும் வரங்களையும் தருபவன் என்பதையும் உணர்த்துகின்றன. ஸவிதா என்பது அறிவைத் தூண்டுபவன் என்று பொருள்படும். பூஷா என்ற பெயருக்கு, 'பாதைகள் கால்நடைகள் முதலியவற்றைக் காப்பவன், உயிரோட்டமளிப்பவன்' என்பது கருத்து. விவஸ்வான் என்பது, 'ஒளியைத் தருபவன்' என்று பொருள்படுகிறது என்று சூரிய தாபினி உபநிஷத்துக் கூறுகிறது.

மண்டலப் பிரம்மோபநிஷதமும் சூரிய உபாசனையைப் பற்றிக் கூறுகிறது. இந்த உபநிஷதத்தின் ரிஷியாகிய யாஜ்ஞுவல்கியருக்குச் சூரிய தேவனே இந்த உபநிஷத்தை உபதேசித்தான். இந்த உபநிஷதம் கூறும் விதிமுறைகளின்படி சூரிய உபாசனை செய்து சூரிய மந்திரங்களை ஜபிப்பவர்களுக்கு இக பர நலன்கள் யாவும் உண்டாகும்.

அழிவற்ற யோகத்தை முதலில் விவஸ்வானுக்கே தாம் போதித்ததாகக் கீதையில் நான்காம் அத்தியாயத்தில் ஸ்ரீகிருஷ்ணர் கூறுகிருர். அந்த யோகத்தைச் சூரியன் தன் மகனுகிய மனுவுக்கும் (வைவஸ்வத மனு), மனு சூரிய குலத்து மூல புருஷனுகிய இக்ஷ்வாகுவுக்கும் உபதேசித்ததாகக் கீதையில் வருகிறது. ஆன்மாக்கள் தங்கள் நல்வினை தீவினைகளுக்கு ஏற்பச் செல்லும் ஒளிவழி இருள்வழி ஆகிய பாதைகளில், முக்திக்கு அழைத்துச் செல்லும் ஒளிவழி சூரியனின் ஊடாகச் செல்வதாகச் சாஸ்திரங்கள் கூறுகின்றன.

## இதிகாசங்களில் சூரியன்

மகாபாரதத்தில் நாடு கடத்தப்பட்ட யுதிஷ்டிரர் சூரியனை வழிபட்டு அக்ஷயபாத்திரம் பெற்றதாக வன பர்வம் கூறுகிறது. அதில் யுதிஷ்டிரர் பாடிய 108 சூரிய நாமாக்கள் உள்ளன. பவிஷ்யபுராணத்திலும் ஸௌரபுராணத்திலும் சூரியனைப் பரதேவதையாக வழிபடும் முறை விவரிக்கப்பட்டுள்ளது.

ராமாயணத்திலும் சூரிய வழிபாடு பற்றிய குறிப்பைக் காண்கிறோம். ஸ்ரீராமபிரான் சூரிய வம்சத்தில் உதித்த அரசர். அவர் ராவண யுத்தத்தின்போது உடல் களைப்புற்று மனச்சோர்வுடன் இருந்தார். அப்போது சூரியனின் மகனுகிய அகஸ்தியர் ஸ்ரீராமபிரானுக்கு ஆதித்திய ஹ்ருதயத்தை உபதேசித்தார். அதை ஸ்ரீராமர் மூன்று முறை பாராயணம் செய்தவுடன் புத்தெழுச்சியும் வீர உணர்வும் பெற்று ராவணனை வெற்றி கொண்டார் என்று ராமாயணம் கூறுகிறது.

புராணங்களிலும் தந்திரங்களிலும் சூரிய பகவானைப் பற்றிய துதிப் பாடல்கள் ஏராளமாகக் காணப்படுகின்றன. இந்தியாவில் சூரியனுக்காக எழுந்த ஆலயங்களில் ஒரிசாவிலுள்ள கோனார்க் ஆலயம் முக்கியமானது. இது கி.பி. 1230-64இல் நரசிம்மதேவன் என்ற அரசனால் கட்டப்பட்டது. சூரியன் ஏழு குதிரைகளுடன் ரதத்தில் வருவதைக் குறிப்பிடும் வகையில் ரதம் போன்ற அமைப்பில் இந்த ஆலயம் அமைந்துள்ளது.

ஆந்திர நாட்டில் அரசவல்லி என்ற இடத்தில் சூரியனுக்குக் கோவில் உள்ளது. நவக்கிரகங்களோடு கூடிய சூரியனைத் தமிழ்நாட்டில் பெரும்பாலும் எல்லாக் கோவில்களிலும் காணலாம். சில ஆலயங்களில் சூரியனுக்கென்றே தனியாக இடம் உண்டு. கங்கைகொண்ட சோழபுரத்தில் உள்ள சூரியனின் ஆலயம் இப்போதும் பிரசித்தி பெற்று விளங்குகிறது. கும்பகோணத்தில் நாகேசுவர சுவாமி ஆலயத்திலும், காஞ்சி கச்சபேசுவர ஆலயத்திலும் சூரியனுக்குத் தனி இடங்கள் உண்டு.

## சூரிய வழிபாடும் தமிழரும்

பண்டைத் தமிழ் இலக்கியமாகிய தொல்காப்பியத்திலும், பிற்காலத்தில் தோன்றிய இலக்கியங்களிலும் சூரிய வழிபாடு பற்றிய செய்திகள் காண்கின்றன. புறநானூறு, திருமுருகாற்றுப்படை, சிலப்பதிகாரம், நாயன்மார்களின் பாடல்கள் முதலியவற்றுள் சூரியனின் புகழ் பேசப்படுகிறது.

ஸ்ரீமகாவிஷ்ணுவின் இரண்டு கண்களில் ஒன்றாகச் சூரியனைப் பழைய இலக்கியம் கூறுகிறது. புறநானூறு, கிழக்கில் உதிக்கும் காலைக் கதிரவனின் கம்பீரத் தோற்றத்தை, அரசன் ஒருவன் ரதத்தில் பவனி வருவதாக உவமிக்கிறது. திருமுருகாற்றுப்படை, "அனைவராலும் போற்றப்படும் சூரியன் உலகை மகிழ்ச்சியில் ஆழ்த்துகிறான்" என்று கூறுகிறது.

சிலப்பதிகாரத்தின் மங்கல வாழ்த்துப் பாடலை இளங்கோவடிகள், "ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்" என்று சூரிய வழிபாட்டுடன் துவக்குகிறார். தன் கணவன் பாண்டிய மன்னனால் கொல்லப்பட்டதை அறிந்த கண்ணகி சூரியனிடம் நீதி வழங்கும்படி கேட்டு அலறியதாகச் சிலப்பதிகாரம் கூறுகிறது.

கவியரசர் பாரதியார் பாஞ்சாலி சபதத்தில் காயத்திரி மந்திரத்தின் கருத்தை உள்ளுறையாகக் கொண்டு அழகிய பாடலை அமைத்துள்ளார் :—

"செங்கதிர்த் தேவன் சிறந்த ஒளியினைத்
தேர்கின்றோம் — அவன்
எங்களறி வினைத் தூண்டி நடத்துக
என்பதோர் — நல்ல
மங்களம் வாய்ந்த சுருதிமொழி"

என்பது அந்தப் பாடல். அவருடைய புதிய ஆத்திசூடி, வசனகவிதை முதலிய படைப்புக்களிலும் சூரிய வழிபாடு பற்றிய கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன.



பண்டைத் தமிழர் சூரியனைச் சிவன் என்னும் பெயரிலேயே வழிபட்டிருக்கிறார்கள் என்பது ஆராய்ச்சியாளர்களின் கருத்தாகும். சிவன் என்பது சிவந்தவன் என்பதைக் குறிக்கும் தனித் தமிழ்ச் சொல்லாகும். சிவ வழிபாடு ஞாயிறு வழிபாட்டிலிருந்து தோன்றியிருக்கக் கூடும் என்றும் அறிஞர்கள் கருதுகின்றனர்.

அருக்கன் பாதம் வணங்குவர் அந்தியில்
அருக்க னுவான் அரனுரு அல்லனே?
—திருநாவுக்கரசர் தேவாரம்

இந்தத் தேவார அடிகள் சூரிய வழிபாடும் சிவன் வழிபாடும் ஒன்றே என்பதை வலியுறுத்துவதாக அமைந்துள்ளன.

இலங்கையில் ஞாயிற்றின் ஒளி விளங்கும் மலை 'சிவன் ஒளிமலை' எனப்பெறுகிறது. இந்தப் பெயர் மிகப் பழமையானது. சூரியனைக் குறிக்கும் சொல்லாகிய 'தாமம்' என்னும் சொல்லிலிருந்தே தமிழ் என்னும் சொல் தோன்றியது என்று கருதுபவர்களும் உண்டு.

## வெளிநாடுகளில் சூரிய வழிபாடு

துருக்கியிலும் சைபீரியாவிலும் சூரிய வழிபாடு அரசாங்க மதத்தின் ஒரு பகுதியாக இருந்திருக்கிறது. அங்கே சூரியன் கடவுள்களுக்கெல்லாம் தலைவனாகவும், நீதிதேவனாகவும், உரிமைத் தேவனாகவும் (God of Justice and right), மேலிருந்து மனிதர்கள் செய்யும் செயல்களைப்

பார்த்துக்கொண்டிருக்கும் பக்கச் சார்பற்ற (கர்ம ஸாக்ஷியான) தேவனாகவும், சமாதானப் பிரியனாக வும் போற்றப்பெறுகிறான்.

அந்த நாட்டு அரசன் முவதலிஸ் (Muwatallis) இயற்றிய பிரார்த்தனை ஒன்று, "சூரியதேவனே! வானத்தின் தலைவனே! எம்பெருமானே! மனிதர் களின் மேய்ப்பனே! உலகுக்கு நீதி வழங்குப வனே!" என்று போற்றுகிறது.

பாரசீகத்தில் சூரிய மதம் மித்திர மதம் (Mitharaism) என்றே வழங்கப்பட்டது. ஐரோப் பாவுக்குச் சூரிய வழிபாடு அவஸ்தென் மித்திரன் (Avestan Mithra) வழிபாட்டிலிருந்தே சென்ற தாகக் கூறப்படுகிறது. அவஸ்தென் மித்திரன் பரந்த மேய்ச்சல் நிலங்களின் தலைவனாகவும், உண்மையே வடிவெடுத்தவனாகவும், ஆயிரம் கண்களையும் காது களையும் உடையவனாகவும் போற்றப்பட்டான். பின்வரும் அவெஸ்தன் துதிப்பாடல் சூரியனை, "நன்மையே உருவானவரும், வீரரும், முதன்மை யானவரும், கருணையே வடிவெடுத்தவரும், இணை யில்லாத பெருமையுடையவரும், மேலான இடத்தில் வசிப்பவரும், எல்லாமறிந்தவருமாகிய மித்திரனை வணங்குகிறேன்" என்று, உபநிஷதங்கள் சூரியனைப் போற்றுவது போலப் போற்றுகிறது.

மக (Maga) அல்லது மாகி (Magi) என்பது சூரிய வழிபாட்டின் புரோகிதர்களைக் குறிக்கும் சொல்லாகும். அராபிய சாம்ராஜ்யத்தின் வளர்ச்சி யோடு இந்தப் புரோகிதர்களின் ஆதிக்கமும் பெருகியது. அது காரணமாகச் சூரிய வழிபாடு அரேபியா முழுவதும் பரவியதுடன் ரோம் சாம்ராஜ்யத்திலும் கிரீஸ் முதலிய நாடுகளிலும் பரவியது.

எகிப்தியர் ரி (Re), ரா-அடுன், அமன் என்ற பெயர்களால் சூரியனை வழிபட்டனர். எகிப்திய அரசர்கள் அனைவரும் தங்களைச் சூரியனின் புதல்வர்கள் என்று (இந்தியச் சூரிய வம்சம் போன்று) கூறிக்கொண்டார்கள். தங்கள் பெய ருடன் சூரியனின் பெயரான ரி (Re) என்பதையும் சேர்த்துக்கொண்டார்கள். கதிரவன் கோயில்களைக் கட்டி அவற்றில் ஞாயிற்றுத் தம்பங்களை நாட்டி வைத்தார்கள். இறந்துபோகும் அரசர்கள் சூரியக் கடவுளுடன் ஒன்று சேருகிறார்கள் என்பதை விளக்கும் சின்னமாக அரசர்களின் கல்லறைகளின் மீது உயரமான பிரமிட்டுகள் கட்டப்பட்டன. எகிப்து, ஆசியா மைனர், பாபிலோனியா முதலிய நாடுகளில் சூரியன் உதிக்கும் திசையை நோக்கி ஆலயங்கள் கட்டப்பட்டன.

இந்துக்கள் சூரியனைக் கருடன், ஹம்சன் என்று வர்ணித்திருப்பதைப் போலவே எகிப்தியர்களும் சூரியனைப் பருந்து என்று வர்ணித்திருக்கிறார்கள்.

மெக்சிகோவில், 'உயிர்களுக்கெல்லாம் சூரியன் மையமாக விளங்குகிறான்' என்பதை உணர்த்தும் ஞாபகச் சின்னங்கள் காண்கின்றன. எகிப்தியர்கள் காலத்தை நான்கு யுகங்களாக வகுத்திருந்தார்கள். அவர்கள் சூரியனையே முழுமுதற் கடவுளாகக் கொண்டிருந்ததனால் சூரியனின் பெயரையே ஒவ்வொரு யுகத்திற்கும் வைத்தார்கள். இங்குள்ள பேரு நாட்டு அரசர்களும் தங்களைச் சூரியனின் புதல்வர்கள் என்றே கூறிக்கொண்டார்கள்.

அமெரிக்காவிலும் ஆப்பிரிக்காவிலும் எகிப்தியச் சமாதிகள் போன்று எழுப்பிய பெரிய செய்குன்று களின் மீது சூரியக் கடவுளை வழிபட்டார்கள். அத்தகைய செய்குன்றுகள் பல இன்றும் காணப் படுகின்றனவாம். செவ்விந்தியர்கள் பல சடங்கு களுடன் கூடிய பலிகளையும் நிவேதனங்களையும் சூரியனுக்குப் படைத்தார்கள். சூரியதேவனை மகிழ்விக்கச் சூரிய நடனம் என்ற ஒரு வகை நடனத்தை ஆடினார்கள்.

கி.மு. 2800ஐச் சேர்ந்த சுமேரிய இலச்சினைகளில் (Seals) சூரியக் கடவுளின் உருவங்கள் காண் கின்றன. அவற்றில் மனித வடிவத்திலுள்ள சூரியக் கடவுளின் தோள்களிலிருந்து ஒளிக் கிரணங்கள் வீசும் வகையில் பொறித்துள்ளனர்.

மெஸபொடேமியா மக்கள் சூரியனைக் காவல் தெய்வமாகக் கருதினர். உண்மையையும் நீதியை யும் நிலைநிறுத்துபவராகவும், சட்டங்களைப் பிரகடனப்படுத்துபவராகவும் சூரியனை அவர்கள் கருதினர்.

பார்த்தியப் பேரரசர்கள் (Parthians) தங்களைச் சூரியனின் சகோதரர் என்று கருதினார்கள். அரசர்கள் சூரியனின் நேரடிச் சந்ததியினர் என்ற நம்பிக்கை ஜப்பானிலும் உண்டு. தொன்மை வாய்ந்த கலாசாரங் களையுடைய எல்லா நாடுகளிலும், சூரியனுக்கும் அரச பரம்பரையினருக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்ற நம்பிக்கை இருந்து வந்திருக்கிறது.

செமித்திய மக்கள் (Semitics) சூரியனை 'எல்' என்ற பெயர் கொடுத்து வணங்கினர். எல், சிவன், பகல், வேல், கெக்குலிஸ், சுயஸ், யூதர் முதலியன சூரியக் கடவுளின் மறுபெயர்கள் ஆகும். கடவுளைக்

குறிக்க முஸ்லிம்கள் வழங்கும் அல்லா என்ற பெயரும் 'எல்' சம்பந்தமானதே. 'எல்' என்பது அராபிய மொழியில் 'அல்' எனத் திரிந்து வழங்கும்.

சீனாவில் சூரியனுடன் தொடர்புபடுத்திப் பல கர்ண பரம்பரைக் கதைகளும் புராணங்களும் வழங்குகின்றன. பத்துச் சூரியர்கள் இருப்பதாகவும் அவர்கள் நம்பினார்கள். கிரேக்க அரசர்கள் சூரியனைத் தங்கள் பெருமைக்கு உரிய சின்னமாகக் கருதினார்கள்.

சாம்ராஜ்யங்களையும் சக்கரவர்த்திகளையும் காக்கும் கடவுளாகச் சூரியன் விளங்குகிறான் என்ற கருத்து ஸைபீரியாவில் நிலவியது.

ரோம் சாம்ராஜ்யம் முழுவதிலுமே சூரிய வழிபாடு பரவியிருந்தது. எனவே அங்குப் பல சூரிய வழிபாட்டு இடங்களும் கலைச் சித்திரங்களும் நினைவுச் சின்னங்களும் உண்டாயின.

ஐரோப்பாவில் ஸ்காட்டிஷ் (Scottish) எல்லையிலிருந்து ஹங்கேரி (Hungary) எல்லை வரையிலும் முஸ்லிம் படையெடுப்பிலிருந்து தப்பிய சூரியனின் நினைவுச் சின்னங்களான ஐந்நூறு சிற்பங்களும் நானூறு கல்வெட்டுக்களும் இருக்கின்றனவாம்.

ரோமாபுரியில் கி.பி. நான்காம் நூற்றாண்டில் கிறிஸ்தவர்கள் நடத்திய உருவ உடைப்பு (Iconoclasm) என்ற இயக்கத்திலிருந்து தப்பிய சில சூரியக் கோயில்களும் கற்சித்திரங்களும் இப்போதும் இருந்து வருகின்றன. இரண்டாம் நூற்றாண்டிலும் மூன்றாம் நூற்றாண்டிலும் ரோம் நகரத்தில் நூற்றுக்கும் மேலான சூரியன் கோயில்கள் இருந்ததாகத் தெரிய வருகிறது. பண்டைக் காலத்தில் அங்கு நதியோரங்களிலும் இயற்கைவளம் நிறைந்த மலைக் குகைகளிலும் மித்திர வழிபாடு நிகழ்ந்தது. ஒளிக் கதிர்களை வீசும் உதய சூரியனின் உருவம் மித்திரனின் சின்னமாக வழிபடப்பெற்றது.

சூரியதேவன் ஓர் எருமை மாட்டைக் கொல்வது போன்ற உருவங்களை அமைத்திருந்தார்கள். இது பருவகாலங்களையும் காலநிலைகளையும் குறிக்கும் சின்னமாகக் கருதப்பட்டது. இந்துக்கள் காகம், கருடன் முதலிய பறவைகளையும், வில்லாளி சிங்கம் தேள் முதலியன்வற்றையும் சூரியனைக் குறிப்பிடும் சின்னங்களாகக் கொண்டிருந்தனர்.

சூரியனை வழிபடுபவன் (Mithraist) என்று தன்னைக் குறிப்பிட்டுக்கொண்ட ஜூலின் (Julin) என்ற அரசனே ரோமாபுரியை ஆண்ட கடைசிச் சக்கரவர்த்தியாவான். அவன் சூரியனைக் குறித்துத் துதிப்பாடல் ஒன்றையும் இயற்றியுள்ளான்.

இவ்விதம் சூரியனைக் குறித்த பல விதமான கொள்கைகளும் நம்பிக்கைகளும் வழிபாட்டுமுறைகளும் உலகம் முழுவதும் பரவியுள்ளன. பொதுவாக, கிழக்கிந்திய நாடுகள் அனைத்திலுமே சூரியன் சமய உணர்வைத் தூண்டும் சின்னமாகப் போற்றப் பெறுகிறான்.

கிறிஸ்தவ மதத்தின் பலமான பிரசாரத்தாலும் தாக்குதல்களாலும் சூரிய வழிபாடு கி.பி. 400-ஆம் நூற்றாண்டு முதல் மறையத் துவங்கியது. ஆனால் பழம் பெரும் மதமாகிய சூரியமதம் கிறிஸ்தவ மதத்தில் என்றும் மறையாத வகையில் தனது முத்திரையைப் பதித்துள்ளது. கிறிஸ்தவ மத விழாக்கள் கிரியைகள் சிற்பங்கள் முதலியவை பண்டைக் காலச் சூரிய வழிபாட்டுடன் தொடர்பு கொண்டவையே ஆகும் என்று உலகின் பல பாகங்களிலும் தோன்றிய அறிஞர்கள் கருத்துத் தெரிவித்துள்ளனர்.

எனவேதான் பேரறிஞர் ரினான் (Renan) அவர்கள், "கிறிஸ்தவ மதப்பிரசாரம் அதன் ஆரம்ப காலத்திலேயே தடுக்கப்பட்டிருக்குமேயானால் சூரிய வழிபாடே உலகம் முழுவதும் பரவியிருக்கும்" என்று குறிப்பிடுகிறார்.

இயேசு கிறிஸ்து இன்ன நாளில் பிறந்தார் என்று தெரியாத நிலையில், அப்போது பிரபலமாக விளங்கிய சூரியனின் பிறந்த நாளாகிய டிசம்பர் 25-ஆம் தேதியைக் கிறிஸ்துவின் பிறந்த நாளாகக் கிறிஸ்தவ மதம் அறிவித்தது. அதுவே மெல்ல மெல்ல நிலை பெற்று, சூரியன் பிறந்த நாள் என்பது வழக்கொழிந்தது. சூரிய பகவான் எருதைக் கொல்வதைப் போன்ற உருவச்சிலைகள் ரோம் நகரில் அந்த நாளில் பிரபலமாக வழக்கத்தில் இருந்து வந்தன. அந்த உருவம் தன்னைத் தானே தியாகம் செய்தல் என்ற கருத்தை விளக்கும் சின்னமாகும். பிற்காலத்தில் இதே கருத்து, கிறிஸ்தவ மதத்தில் இடம் பெற்றது. அந்த உருவச் சிலையுடன் கூடிய சூரிய வழிபாட்டிலிருந்தே 'புனித உணவு (இயேசுவின் மாமிசமும் இரத்தமும்)' என்னும் கொள்கையைக் கிறிஸ்தவ மதம் சுவீகரித்துக்கொண்டது. இப்போது 'புனித உணவு'க் கொள்கை கிறிஸ்தவ மதத்தில் ஆழ்ந்து வேரூன்றியிருக்கிறது.

இது போலவே கிறிஸ்தவ உலகில் தற்போது பிரபலமாக விளங்கும் ஞானஸ்நானம், உயிர்த்தெழல், திருப்பலி போன்ற முக்கியமான பல கொள்கைகளுக்கும் அந்நாளில் வழக்கத்தில் இருந்த சூரிய வழிபாடே ஆதாரமாகும்.

# சுவாமி பிரேமானந்தரின் போதனைகள்

ஒரு பக்தைக்கு : ஒருவருக்குத் தெய்வபக்தி இருக்கலாம்; அதனால் உலகில் இன்பத்தைக்கண்டு விடலாம் என்று நினைக்க இயலாது. இந்த உலகம் மாயையின் விளையாட்டு. அதை யார் அறியக் கூடும்? பக்தன் முற்றிலும் பகவானையே நம்பியிருக்க வேண்டும். இறைவனின் இச்சை எதுவானாலும் அதை ஏற்றுக்கொள்ள வேண்டும். "அம்மா! நீ என்னை எந்த நிலையில் வைத்தாலும், உடலில் சாம்பலைப் பூசி ஒரு மரத்தடியில் வைத்தாலும், பொன்னும் வைரமும் பூட்டி ஓர் அரசபீடத்தில் வைத்தாலும், நான் உன்னை மறக்காமல் மட்டும் இருப்பேனேயானால் அது எனக்கு நல்லதே ஆகும்."

கடவுளிடம் பக்தி இல்லாமல் ஒருவன் அமைதி காண இயலாது. பொருள் ஒருவனை அமைதி உள்ளவனாகவோ ஆனந்தமுள்ளவனாகவோ ஆக்கி விடுவதில்லை.

ஸ்ரீராமகிருஷ்ணரைத் தியானிப்பதில் ஈடுபடு. அவருடைய திருவருளை நாடு. உன்பொருட்டு நான் அதையே விரும்புகிறேன். எப்போதும் பரிசுத்தமான எண்ணங்களைப் பயிற்சி செய். பரிசுத்தம்தான் வலிமை; பரிசுத்தம்தான் பகவான். உனக்கு எவரும் பகை இல்லை என்ற முறையில் வாழக் கற்றுக்கொள். ஸ்ரீராமகிருஷ்ணருடைய போதனைகளை நாள்தோறும் படித்து அவற்றை உள்ளத்தில் இருத்திக்கொள்.

ஒரு துறவிக்கு : பிறரை நேசித்து அவர்களை உன்னுடையவர்களாக்கிக் கொண்டால் அவர்கள் நீ காட்டும் வழியைப் பின்பற்றுவார்கள். பிறருக்கு வழி காட்டுகிறவன் அகங்காரம் இல்லாதவனாக இருக்க வேண்டும்.

ஒவ்வொருவரும் அவரவர் இஷ்டப்படியே நடந்து கொள்வது நல்லதன்று. சிறிதளவு கட்டுப்பாடு அவசியம். பகவத்பக்தியும் ஞானமும் உதிப்பதற்கு முன்பு ஒரு சாதகனைச் சுற்றி ஆரம்ப நாட்களில் வேலி இருக்க வேண்டும். ஒரு சிறிய செடியை ஆடுமாடுகளிடமிருந்து காப்பாற்ற வேலி தேவைப் படுவது போலவேதான் இதுவும்.

ஒரு பக்தைக்கு : கனவுகளைப்பற்றி அதிகமாகக் கவனிக்காதே. சில சமயங்களில் கனவுகள் பலிக்கலாம்; ஆனால் பொதுவாகக் கனவு கனவுதான், உண்மையல்ல. என்றாலும் மகாபுருஷர்களைப்பற்றிக் கனவு காண்பது நன்மைக்கு அறிகுறி. அப்படிப்பட்ட கனவுகளைப்பற்றிக் கண்டவர்களிடமெல்லாம் சொல்லக்கூடாது.



நீ விழித்திருக்கும் போது உன் நடத்தையை நன்றாகக் கவனித்துத் திருத்திக் கொண்டும், நல்ல வழியில் செயலாற்றிக்கொண்டும் இருக்கப் பழக வேண்டும். நண்பர்களுடன் ஸ்ரீராமகிருஷ்ணருடைய வாழ்க்கையையும் உபதேசங்களையும் பற்றிப் பேசுவது நல்லது.

ஸ்ரீராமகிருஷ்ணரிடம் பிரார்த்தனை செய். அவர் ஞானமளிப்பார். அவருடைய பலத்தால் நீ பலம் உள்ளவளாவாய்.

சுவாமி துரியானந்தர் இப்போது பேலூர் மடத்தில் இருக்கிறார். அவர் சாஸ்திரங்களை நன்கு அறிந்தவர். ஞானஒளி மிக்கவர். அவருடன் நீ கடிதத் தொடர்பு கொள்ளலாம். அவர் ஒவ்வொரு கடிதத்திற்கும் பதில் எழுதுவார். ஆனால் நான் அவருக்கு எழுதும்படி உன்னிடம் கூறியதாகத் தெரிவிக்காதே. மிஸ் மேக்ளாட் என்ற அமெரிக்க மாது, சுவாமி விவேகானந்தரைப் பின்பற்றுகிறவர். அந்த அம்மையார் இந்தியாவிலிருந்து கப்பல் வழியாக இந்த ஆபத்தான காலத்தில் (முதல் உலகப் போர்க் காலம்) கப்பல்கள் எதிரிகளால் மூழ்கடிக்கப்படும் போது இங்கிலாந்திற்குப் புறப்படுகிறார். இன்று அவரிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. "சுவாமிஜியின் சகோதரச் சீடர் ஒருவருடைய ஆசியைப் பெற்று நான் புறப்படுவதால், நான் மட்டுமன்று, கப்பலில் உள்ள எல்லோருமே

சௌக்கியமாகப் போய்ச் சேருவோம் என்பது நிச்சயம்'' என்று அந்த அம்மையார் எழுதியிருக்கிறார். அவருடைய அந்த நன்னம்பிக்கையைக் கவனி. பக்தியும் நல்ல நம்பிக்கையும் ஒருவரை ஞானியாகவும் முக்தராகவும் தெய்வமாகவும் மாற்றி விடக்கூடும். இந்த அமெரிக்க மாது பேலூர் மடத்தில் விருந்தினர் இல்லத்தில் நான்கு மாத காலம் தங்கியிருந்தார். அவர் பரந்த இதயம் படைத்தவர்; மிகவும் நல்லவர்.

* * *

ஒரு பக்தருக்கு: மனிதன் உலக வாழ்க்கைக்கு அடிமை என்பது உண்மை. ஆனால் உலகில் இருந்துகொண்டே, ''பிரபோ! எனக்கு நல்ல புத்தியைக் கொடு'' என்று பிரார்த்தனை செய். உன்னிடம் நான் எந்த ஒரு தீய குணத்தையும் காணவில்லை. நீ நாளைக்கே ஒரு மகாத்மா ஆக மாட்டாய் என்று யார் சொல்ல முடியும்? நமக்குப் பல வேஷங்களைப் போட்டு, நம்முடன் பகவான் விளையாடிக்கொண்டிருக்கிறார். நம்முடைய முந்திய செயல்களின் சம்ஸ்காரங்களுக்குத் தக்கபடி நாம் நடிக்கிறோம். ஆண்டவனுடைய கையிலுள்ள பொம்மைகளைப் போன்றவர்களே நாம் அனைவரும். அவர்தாம் நமக்குப் புகலிடம்.

ஒரு பெண் பக்தருக்கு: நீ தூய அன்னையின் அருளைப் பெற்றிருக்கிறாய். அது சாதாரணப் பாக்கியமல்ல என்பதை நன்றாகத் தெரிந்துகொள். பல பிறவிகளில் நீ செய்துள்ள தவத்தின் பயன் அது என்பது நிச்சயம். ஸ்பரிசவேதியால் தொடப்பட்ட இரும்பும் பொன்னாகிவிடும். உனக்குத் தெரிந்தாலும் தெரியாவிட்டாலும் ஸ்பரிசவேதியான அன்னையின் பாதகமலத்தால் உன் உடலும் உள்ளமும் தங்கமாகிவிட்டன. அந்த ஸ்பரிசத்தால் உனக்குப் பக்தியில் ஆர்வம் ஏற்பட்டுள்ளது. உலக இன்பங்களை விட்டு நீங்க ஆசை உதித்திருக்கிறது. உனக்குத் தெரிந்தாலும் தெரியாவிட்டாலும் உன் பிறவி புனிதமாகிவிட்டது. உலகமாதாவாகிய அவள் உலகிலுள்ள எல்லா உயிர்களுக்கும் நன்மை புரிவதற்காக மனித உடல் தாங்கி வந்திருக்கிறாள். அவளுடைய அருள் உனக்குக் கிட்டியிருப்பதை அறிந்த நான், 'நீ விடுதலை அடைந்துவிட்டாய்' என்பதைத் தெளிவாக உணர்கிறேன்.

எவர் கள்ளங்கபடம் அற்றவர்களாகவும், உண்மையில் நாட்டமுள்ளவர்களாகவும், தன்னடக்கம் உள்ளவர்களாகவும், பகவத்பக்தர்களாகவும் இருக்கிறார்களோ அவர்கள்தாம் சித்தர்களும் ரிஷிகளும் தேவதைகளும். மனித உடலில் தோன்றியபோதிலும், ஸ்ரீராமகிருஷ்ணருடைய திருவுருவத்தைத் தியானம் செய்யும் பாக்கியம் உனக்கு அவருடைய அளவுகடந்த கிருபையால் கிடைத்திருக்கிறது. தாயே! என் ஆயுள் முழுவதும் நான் நன்கு உணர்ந்ததைக் கூறுகிறேன். ஸ்ரீராமகிருஷ்ணரையும், தூய அன்னையையும் நீ தியானம் செய்வதால் ஆன்மிக வாழ்க்கைக்கு வேண்டிய அனைத்தையும் நீ பெற்று விடுவாய் என்பது நிச்சயம். பதிதபாவனரான ஸ்ரீராமகிருஷ்ணர் நமக்காகத்தான் மனித உடலில் தோன்றினார்; சூட்சுமமாக அவர் இப்போதும் நம்மிடையே உலவி வருகிறார். ஆர்வமுள்ள ஜீவர்களுக்கு அருள்புரிகிறார். முழுமனதுடன் பிரார்த்திப்பவர்களின் முன் அவர் காட்சி அளிக்கிறார். இன்ப துன்பங்களைப் பாராட்டாமல், பிளவுபடாத மனதுடன், ஸ்ரீராமகிருஷ்ணரையும் தூய அன்னையையும் தியானம் செய்துகொண்டே இரு. சாட்சியாக இருக்கும் பகவான் பக்தர்களின் விருப்பங்களைப் பூர்த்தி செய்வார். நம்மைவிட அதிகமாக அவர் நம்முடைய நன்மையை எண்ணுகிறார். அதனால்தான் அவர் நம்முடைய ஆன்மிக வாழ்க்கைக்கு வேண்டிய அனைத்தையும் செய்வார் என்று கூறுகிறேன். பயப்படாதே. இரவும் பகலும் அவரையே நாடு. பிரார்த்தனை செய். அழு. அன்பும் பக்தியும் வளர்வதற்கு உண்மையும் பரிசுத்தமும்தான் மார்க்கம். தூய்மையைக் கைக்கொள். நம்பிக்கையையும் பக்தியையும் வளர்த்துக் கொண்டால் உனக்கு எல்லாமே கிடைத்துவிடும். நீ பரிபூர்ணத்துவத்தை அடைவாய்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் திருவருளால் உன்னிடம் பக்தியும் நம்பிக்கையும் நிறைந்து, உன்னை அவர் காத்தருள வேண்டும் என்று நான் பிரார்த்திக்கிறேன். உனக்கு மனிதப் பிறவி கிடைத்திருப்பதால் இந்த உடலில் இருக்கும்போதே ஸ்ரீராமகிருஷ்ணருடைய தரிசனத்தைப் பெற்று, இந்தப் பிறவியைப் பயனுடையதாக ஆக்கிக்கொள். அதற்குப் பிறகே நீ வேறு வேலையைக் கவனிக்க வேண்டும்.

பக்தர்களின் குடும்பங்கள் ஒன்றையொன்று நேசிப்பது நல்லது. இந்த உலகில் சாந்தி எங்கே உள்ளது? பகவானைத் தங்களுக்குச் சொந்தமாக்கிக் கொண்டவர்கள்தாம் ஆனந்தத்தை அடைகிறார்கள். அவர்களேதாம் பாக்கியசாலிகள். ☆

# ஸ்ரீராமபிரானின் அருளுரைகள்

இந்த மாயையோ பழைய வாசனைகள் நிறைந்தது. அப்படிப்பட்ட இதை வெறும் விவாதங்களினாலும் சுருதிகளை (வேதங்களை)ப் படிப்பதனாலும் மட்டும் அழித்துவிட முடியுமா என்ன? ஒரு நாளும் அது சாத்தியமில்லை. பிரம்மஞானத்தைப் பெறுவதனால் மட்டுமே மாயையை அழிக்க முடியும். பிரம்மஞானத்தைப் பெற்ற பிறகு மாயை திரும்ப வந்துவிடுமோ என்ற அச்சத்திற்கே இடமில்லை.

ஃ ஃ ஃ



'நான் இந்த உடல்' என்ற எண்ணம் அவித்தையே ஆகும். அவித்தைதான் மோகத்திற்குக் காரணம். 'நான் இந்த உடல் அல்ல; நான் ஆத்மசொரூபம்' என்பதை அனுபூதியில் உணர்ந்து கொள்ளுவதே வித்யை ஆகும். வித்யையே மோகத்தை அழிக்கக் கூடியது. எண்ணற்ற பிறப்பு இறப்பு என்னும் சம்சாரத்திற்கு அவித்தையே காரணமாக இருக்கிறது. அத்தகைய சம்சாரத்தை ஒழிக்கக் கூடியது வித்யை. ஆகவே, முக்தியை அடைய விரும்புகிறவர்கள் இந்த வித்யையை அனுபூதியில் பெறுவதற்கு ஒருமுகப்பட்ட கவனத்துடன் முயற்சி செய்ய வேண்டும்.

ஃ ஃ ஃ

ஒருவன் முக்தியைப் பெறுவதற்கு உரிய இந்த முயற்சியில் ஈடுபடும்போது ஆசை, கோபம், பேராசை, மயக்கம் (காமம், குரோதம், லோபம், மோகம்) போன்ற பகைவர்களை எதிர்த்துப் போராட வேண்டி வரும். இவற்றுள் கோபமே மிகவும் பயங்கரமானது. இந்தக் கோபம் என்ற எதிரிதான், ஒருவன் முக்தி பெறுவதற்காகக் கடுமையாக முயற்சி செய்யும்போது பலவேறு தடைகளை ஏற்படுத்தி அவனை முன்னேற விடாமல் தடுக்கிறது.

ஃ ஃ ஃ

கோபத்தால் தூண்டப்பட்ட மனிதன் தன் தாய், தந்தை, சகோதரன், நண்பர், உறவினர் ஆகியோரைக்கூடக் கொன்றுவிடத் தயங்கமாட்டான். கோபத்தின்போது செய்த செயல்களைக் குறித்து அடிக்கடியும் பிறகு அவன் வருந்த நேரும்.

ஒருவனைச் சம்சார பந்தத்தில் பிணைத்து வைப்பது கோபமே ஆகும். கோபமே ஒருவனிடமுள்ள நல்ல பண்புகளை எல்லாம் குலைத்துப் பாழ்படுத்திவிடுகிறது. ஆகவே, கோபத்திற்கு இடமே தராமல் அதைத் தவிர்த்துவிட வேண்டும். கோபம் உண்மையிலேயே மிகப் பெரிய எதிரியாகிய யமன்தான். லோபமோ கடத்தற்கரிய வைதரிணி நதி போன்றது. திருப்தி என்பது தேவலோகத்து நந்தவனம் போன்றது. மன அமைதி (சாந்தி) காமதேனுவைப் போன்றது. இதையெல்லாம் நன்கு ஆழ்ந்து சிந்தித்துத் தெளிவு பெற்றுச் சாந்தியைப் பெற ஆவல் கொண்டிருப்பாயாக.

ஃ ஃ ஃ

நீ பொறுமையைப் பெற்றுவிட்டால் உனக்கு எதிரி என்று யாரும் எப்போதும் இருக்க மாட்டார்கள். ஆத்மா என்பது உடல், புலன்கள், புத்தி, பிரபஞ்ச வாழ்க்கை ஆகியவற்றினின்றும் வேறுபட்டது. ஆத்மா பரிசுத்தமானது, சுயம்பிரகாசமானது, பேரின்பமயமானது, உணர்ச்சிகளுக்கு வசப்படாதது, உருவமற்றது. உடல், புலன்கள், மாய வாழ்க்கை ஆகியவற்றினின்றும் ஆத்மா வேறுபட்டது என்று நீ கருதாத வரையில் இந்த உலகத்தின் துன்பங்களாகிய நோய், மரணம் முதலியன உன்னைத் தொந்தரவுபடுத்திக்கொண்டுதான் இருக்கும்.




# சத்சங்கத்தின் மகிமை

'நரேந்திரன்'

ஒரு சமயம் விசுவாமித்திர மகரிஷியின் ஆசிரமத்திற்கு வஸிஷ்ட மகரிஷி சென்ருர். விருந்தாளியைத் தக்க முறையில் விசுவாமித்திரர் வரவேற்ருர். அதோடு அவர் தாம் ஆயிரம் ஆண்டுக் காலம் புரிந்த கடுமையான தவத்தின் பலனையும் வஸிஷ்டருக்கு அர்ப்பித்தார். வஸிஷ்டரும் மனமகிழ்ச்சியுடன் திரும்பிச் சென்ருர்.

சில நாள் சென்ற பிறகு விசுவாமித்திரருக்கு வஸிஷ்டரின் ஆசிரமத்தில் விருந்தாளியாகத் தங்கும் வாய்ப்பு ஏற்பட்டது. வஸிஷ்ட மாமுனியும் முறைப்படி விசுவாமித்திரரை உபசரித்தார். அத்துடன் அவர் தாம் அரைமணி நேரம் சத்சங்கத்தில் இருந்து சேமித்த புண்ணியத்தையும் அர்ப்பித்தார். ஆனல் வஸிஷ்டரின் செய்கை விசுவாமித்திரருக்கு அதிருப்தியை உண்டாக்கியது. விசுவாமித்திரர் வாய்திறந்து எதுவும் சொல்லாவிட்டாலும் அவரது முகத்தில் அதிருப்தியினுல் ஏற்பட்ட கோபம் சுடர் விட்டது.

விசுவாமித்திரரின் கோபத்தைக் கவனித்த வஸிஷ்டர், "தங்களுடைய ஆயிரம் ஆண்டுத் தவத்திற்கு என்னுடைய இந்த அரைமணி நேரச் சத்சங்கத்தின் பலன் சமமாகாது என்று நினைக்கிறீர்கள் போலும்! நாம் ஏன் இந்த விஷயத்தை எவரிடமாவது கூறி நியாயம் கேட்கக்கூடாது?" என்று சொன்ஞர்.

விசுவாமித்திரர் ஒப்புக்கொண்டார். உடனே இருவரும் புறப்பட்டனர்.

நியாயம் கேட்கப் புறப்பட்ட இருவருமே பிரம்மரிஷிகள் ஆவர். ஆகவே அவர்களது விவாதத்திற்குத் தீர்ப்பு வழங்க எந்த ரிஷியோ முனிவரோ முன்வரவில்லை. அவர்களுடைய நிலையே அப்படி என்ருல் மன்னர்களைப் பற்றிக் கேட்பானேன்? யாருக்குமே பிரம்மரிஷிகளின் விவாதத்திற்கு நடுவராக இருக்கத் தைரியம் வரவில்லை.

இரண்டு பிரம்மரிஷிகளும் பார்த்தார்கள். வேறு வழி எதுவும் தோன்ருமல் போகவே, பிரம்மலோகத்தை நோக்கி நடையைக் கட்டினர்.

பிரம்மதேவர் அவர்களின் விவாதத்தைக் கேட்டார். சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்தார். 'இவர்களில் எவராவது என் தீர்ப்பினுல் அதிருப்தியுற்றுக் கோபம் அடைந் தாலும் அவர்கள் இடும் சாபத்தால் எனக்குக் கண்டிப்பாக ஆபத்துத்தான் வரும்' என்று நினைத்தார்.

உடனே பிரம்மா ரிஷிகளை நோக்கி, "தாங்கள் இருவரும் தயவுசெய்து விஷ்ணு பகவானிடம் செல்லுங்களேன். சதா சர்வகாலமும் படைப்புத் தொழிலில் ஈடுபட்டு இருப் பதனுல் என்னுல் சுய நினைவுடன் எவ்வித முடிவுக்கும் வர முடியவில்லை" என்று கூறினர்.

உடனே அவ்விருவரும் விஷ்ணுலோகத்தை அடைந்தனர். பகவான் மகாவிஷ்ணு மகரிஷிகளின் வேண்டுகோளைக் கேட்டார். அவர் அவர்களைப் பார்த்து, "மகரிஷிகளே! நான் தங்கள் இருவருடைய திருவடிகளையும் வணங்குகிறேன். யார் ஒருவர் சதா சர்வகாலமும் தவம், சத்சங்கம் முதலியவற்றில் ஈடுபட்டிருக்கிருரோ அவரே தவம், சத்சங்கம் ஆகியவற்றின் சிறப்பைப் பற்றிய முடிவான தீர்ப்பை அளிக்க முடியும். எனக்கோ இவைபற்றி ஒன்றுமே தெரியாது. எனவே தாங்கள் இருவரும் தவமூர்த்தியாக விளங்கும் சிவபெருமானிடம் சென்று கேளுங்களேன். அவரே உங்களுக்குத் தீர்ப்புக் கூறும் வல்லமை பெற்றவர்" என்று கூறி, முனிவர்கள் இருவரையும் வழியனுப்பி வைத்தார்.

சிவனைக் காட்டிவிட்டு விஷ்ணுபகவான் ரிஷிகளிடமிருந்து தப்பித்துக்கொண்டார்.

ரிஷிகள் இருவரும் கைலாயத்தை அடைந்தனர். ஆனல் சங்கரரும், "ஆலகால விஷத்தை உண்டது முதல் என் மன அமைதி குலைந்துவிட்டது. என்னல் முன்புபோல் தவம் இயற்ற முடியவில்லை. மனம் ஒருமைப்பட மறுக்கிறது. சேஷ பகவான் தமது தலையில் சதாகாலமும் பூமியைத் தூக்கி வைத்துக்கொண்டிருப்பதோடு தவத்திலும் ஈடுபட்டிருக்கிருர். தம் ஆயிரம் வாயினல் முனிசிரேஷ்டர்களுக்கு நல்ல விஷயங்களைக் கூறிக்கொண்டு அவர்கள் சத்சங்கத்தின் லாபத்தை அடையுமாறு செய்துகொண்டிருக்கிருர். அதனல் அவரே உங்களுக்குச் சிறந்த தீர்ப்பை வழங்க முடியும்" என்று சொல்லிக் கைவிரித்துவிட்டார்.

பாதாள லோகத்திற்குச் சென்று ரிஷிகள் இருவரும் தம் வேண்டுகோளைச் சேஷ பகவானிடம் கூறினர். அவர்கள் கூறியதைப் பொறுமையுடன் கேட்ட பிறகு சேஷ பகவான் அவர்களைப் பார்த்து, "உங்கள் இருவரில் எவராவது ஒருவர் தமது திறமையினல் இந்தப் பூமியைச் சில விளுடிகள் வரை அந்தரத்தில் நிறுத்தி வைத்தீர்களேயானல் என் பாரம் குறையும். நானும் சிறிது சிரம பரிகாரம் செய்துகொண்டு தக்கபடி தீர்ப்பளிப்பேன்" என்ருர்.

உடனே விசுவாமித்திரர் கையில் ஜலத்தை எடுத்துக்கொண்டு, "நான் என் ஆயிரம் ஆண்டுத் தவப்பயனை அர்ப்பிக்கிறேன். பூமி ஆகாயத்தில் (அந்தரத்தில்) நிலைத்து நிற்கட்டும்" என்று சங்கல்பித்தார்.

ஆனல் பூமியோ சிறிதுகூட அசையவே இல்லை.

அடுத்து வஸிஷ்டர், "நான் என் அரைமணி நேரச் சத்சங்கத்தால் கிடைத்த புண்ணியத்தை அர்ப்பிக்கிறேன்; பூமிதேவி ஒரு சில விளுடிகள் அந்தரத்தில் இருக்கட்டும்" என்று சங்கல்பித்தார்.

அவர் சங்கல்பித்து முடித்தவுடனேயே பூமி சேஷ பகவானின் தலையின் மீதிருந்து எழுந்து எந்தவித ஆதாரமும் இன்றி அந்தரத்தில் நின்றது!

பிறகு என்ன? பூமி நின்றதைப் பார்த்தவுடனே விசுவாமித்திரரின் வாய் பேச்சிழந்தது. இனி இந்த விஷயத்தைப்பற்றி நிர்ணயிப்பதற்கே, தீர்ப்பு வழங்குவதற்கோ எந்தவிதத் தேவையும் இருக்கவில்லை. விசுவாமித்திரர் வஸிஷ்டரின் கால்களில் வீழ்ந்து வணங்கினர். தழுதழுத்த குரலில் அவரிடம், "பகவானே! தாங்கள் என்றுமே பெரியவர்தாம்!" என்று கூறி மன்னிப்புக் கேட்டார்.

# யானும் எனதும்

பேராசிரியர்
டி. கே. நாராயணன், M Sc

நான் ஒரு புது வீடு கட்டி அதை ஒருவருக்கு வாடகைக்கு விடுவதாக வைத்துக்கொள்வோம். அந்த நண்பர் படங்களை மாட்டுவதற்காகச் சுவரில் ஆணி அடிப்பதை நான் பார்த்துவிடுகிறேன். அப்போது அவர் சுவரில் ஆணி அடிப்பது என் இதயத்தில் ஆணி அறைவதைப் போல நான் உணர்கிறேன். ஏன்? அந்த வீடு 'என் வீடு' என்ற எண்ணத்தினால் அத்தகைய உணர்ச்சி எனக்கு ஏற்படுகிறது.

அதே வீட்டை நல்ல தொகைக்கு நான் ஒருவருக்கு விற்றுவிடுகிறேன் என்று வைத்துக்கொள்வோம். அதை விற்ற தொகையைப் பாங்கில் பிக்சட் டெபாசிட்டில் போட்டாகிவிட்டது. அதன் பின் அந்த வீட்டின் மீது இடியே விழுந்து சேதமடைந்தாலும் அது குறித்து எனக்குக் கொஞ்சமும் கவலை ஏற்படுவதில்லை. ஏன்? இப்போது அது என் வீடு அல்ல.

எனது ஒரு சிறிய குடை கிழிந்துவிட்டால் அது எனக்குப் பெரிய மனவருத்தத்தை அளிக்கிறது. அதே வேளையில் ஊரிலுள்ள பெரிய குடைக் கடையே தீவிபத்தில் கருகிச் சாம்பலானாலும் அது என்னைக் கொஞ்சமும் பாதிப்பதில்லை. ஏன்? அந்தக் கிழிசல் குடை என்னுடையது. அந்தக் குடைக் கடையோ என்னுடையதல்ல.

என் மகன் எம். ஏ. தேர்வில் வெற்றி பெற்றுவிட்டால் நானே எம். ஏ. பட்டம் பெற்றுவிட்டது போலப் பெரிதும் மகிழ்ச்சியடைகிறேன். அதே வேளையில் என் முட்டாள் மகன் பெயிலாகி அவனைவிடப் புத்திக் கூர்மை அதிகமுள்ள ஏனைய சில மாணவர்களும் பெயிலாகிவிட்டால் அப்போது என் மனம் மற்றவர்களது தோல்வியைவிட என் மகனின் தோல்வியையே மிகவும் பெரிதுபடுத்திக் காட்டுகிறது. 'கேள்விகள் மிகவும் கடினம்', 'நடத்தாத பாடத்தில் கேள்விகள் கேட்கப்பட்டுவிட்டன', 'விடைத்தாளைத் திருத்துபவர் வேண்டுமென்றே மதிப்பெண்ணைக் குறைத்துப் போட்டுவிட்டார்'— இவ்விதம் எத்தனை எத்தனையோ பழிகளைப் பிறர்மீது சுமத்த என் மனம் முயலுகிறது. ஏன்? அவன் என் மகன். அதே சமயத்தில் முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றிருக்க வேண்டிய அண்டை வீட்டு மாணவன் பெயிலாகிவிட்டது பற்றி எனக்குக் கொஞ்சமும் வருத்தம் ஏற்படுவதில்லை. ஏன்? அவன் என் மகன் அல்ல.

பாக்டரியில் வேலை பார்க்கும் என் மகனது சுண்டுவிரல் இயந்திரத்தில் சிக்குண்டு நசுங்கிவிட்டதைக் கேட்டு எனக்கு மயக்கமே வந்துவிடுகிறது. ஏன்? அவன் என் மகன். அதே சமயத்தில் போயிங் விமானம் தீப்பற்றி எரிந்து அதில் பிரயாணம் செய்த 453 பிரயாணிகளும் கருகிச் சாம்பலான செய்தி என்னைக் கொஞ்சமும் கலவரத்திற்கு உள்ளாக்குவதில்லை. ஏன்? அவர்கள் என்னுடையவர்கள் அல்லர்.

'என் இஷ்டப்படி மனைவி நடக்க வேண்டும்' என்று கணவன் நினைக்கிறான். 'நான் விரும்பியபடிதான் என் கணவர் நடந்துகொள்ள வேண்டும்' என்று நினைக்கிறாள் மனைவி. இவ்விதம் சற்று ஆராய்ந்து பார்த்தால் உலகில் நம் செயல்கள் அனைத்தும் இந்த 'யான்', 'எனது' என்ற வட்டத்திற்குள்ளேயே சுற்றிச் சுழல்வதைக் காணலாம்.

ஏன்? தத்துவங்கள் அனைத்துமே இந்த 'யான்', 'எனது' என்ற இரண்டு வார்த்தைகளினுள் அடங்கிவிடுகின்றன. 'எனது' என்ற எண்ணம் நம்மைப் பந்தப்படுத்துகிறது. 'எனது அல்ல' என்ற எண்ணம் நமக்கு விடுதலை அளிக்கிறது.

இதைத்தான் வள்ளுவர் மிகவும் அழகாகத் தெரிவிக்கிறார்:

யான் எனது என்னும் செருக்கு அறுப்பான்
வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்.

எவன் ஒருவன் 'யான், எனது' என்ற எண்ணங்களிலிருந்து விடுபட்டுச் செயற்படுகிறானோ அவனுக்குக் கிடைக்கும் உயர்நிலை எத்தகையது தெரியுமா? வானோர் அல்லது தேவர்க்கும் மேலான நிலை. அதாவது – விண்ணோராயின் புண்ணியம் குறைந்த பின்பு மீண்டும் மண்ணவராகப் பிறக்க நேரிடும். எனவே அதற்கும் மேலான பிறப்பு

இறப்பற்ற பெருநிலையாகிய பரம்பொருளுடன் இரண்டறக் கலப்பதாகிய உயர்நிலை அது.

உலகிலுள்ள சமயங்கள் யாவும் நம்மை வேண்டிக்கொள்வது ஒன்றே ஒன்றுதான்: ''இந்த 'யான்' என்ற எண்ணத்தை விடுங்கள்.'' இந்த 'யான்' என்பது சம்ஸ்கிருதத்தில் 'அஹம்' எனப்படுகிறது. எனவே வடமொழியிலுள்ள மறைநூல்கள் நம்மை 'அகங்கார'த்தை விட்டொழிக்குமாறு திரும்பத் திரும்பக் கேட்டுக்கொள்கின்றன.

கீதையில் கண்ணபரமாத்மாவும், ''அஹங்கார-விமூடாத்மா கர்த்தாஹம் இதி மந்யதே'' என்கிறார்.

அகங்காரத்தினால் மதியிழந்த மனிதன் 'செய்பவன் நான்' என்று எண்ணுகிறான். ஆனால் உண்மை என்ன? இவனைச் செய்விப்பவன் இவனுக்குள்ளே உறைகின்ற இறைவனேயாவான். இவன் வெறும் கருவி மாத்திரமே. இந்தக் கருவியை இயக்குபவன் இறைவன். 'நிமித்தமாத்ரம் பவ, ஸவ்யஸாசிந்'— 'இடக் கையால் அம்பு எய்யும் பெருந்தோளாய்! நீ (இறைவன் கையில் செயற்படும்) வெறும் கருவி மாத்திரமாக அமைவாயாக' என்று பகவான் கீதையில் அர்ஜுனனைக் கேட்டுக்கொள்கிறார்.

எப்போது இந்த 'யான்' பூரணமாக நம்மிடமிருந்து அகல்கிறதோ அப்போதுதான் நமக்குள்ளே தெய்விகப் பேரொளி பிரகாசிக்கிறது.

இந்த 'நான்' என்பது ஆங்கிலத்தில் 'I' என்று குறிப்பிடப்படுகிறது. அது ஒரு சிறந்த தத்துவத்தை நமக்குப் புகட்டுகிறது. இந்த I என்பதை ஒரு தடுப்புச் சுவர் அல்லது தடித்த திரையாக நாம் கொள்ளலாம். அப்படியானால் நம்மையும் இறைவனையும் பிரிக்கும் தடுப்புச் சுவர் இந்த I தான். இந்த I அல்லது 'நான்' என்னும் எண்ணமே மனமாகச் செயற்படுகிறது. மனம் அற்ற பெருநிலையே பெறற்கரிய உயர்நிலை. மனத்தை அடக்கும் மார்க்கத்தையே அனைத்து மறைநூல்களும் போதிக்கின்றன.

'யோக: சித்தவிருத்திநிரோத:' என்பார் பதஞ்சலி. 'மனத்தின் அலைச்சலைத் தடுப்பதுவே யோகமாகும்.'

நம்மைப் பிடித்தாட்டும் இந்த அகங்காரத்தை அகற்ற முக்கியமாக இரண்டு வழிகள் உள்ளன. ஒன்று: இந்த 'நானை' (அதாவது யான் என்னும் எண்ணத்தை) இறைவனது பாதத்தில் பக்தி மார்க்கத்தின் மூலம் ஒப்படைத்துவிடுவது. பிறகு அந்தப் பக்தன் எதைப்பற்றியும் கவலைப்பட மாட்டான். வெயிலோ மழையோ, பசியோ தாகமோ—ஏன், கொடும்புலி வந்து அவன்மீது பாய்ந்தாலும் அவன் சிறிதும் கலங்க மாட்டான். காரணம், அவனிடம் 'நான்' இல்லை. நான் இல்லாத இடத்தில் இருப்பது 'தெய்வம்'தான். அனைத்தையும் தெய்வசொரூபமாகப் பார்ப்பவனை நான் என்ன செய்யும்? வினை தான் என்ன செய்யும்? கோள் என்ன செய்யும்? கொடுங்கூற்று என்ன செய்யும்? 'நன்றே செய்வாய் பிழை செய்வாய், நானோ இதற்கு நாயகமே'— இதுவே 'நான்' அற்ற பக்தனின் பெருநிலை.

'நானை' அகற்ற உள்ள இரண்டாவது வழி: இந்த 'நான்' என்பது எனது இந்த உடலா, மனமா, புலன்களா, புத்தியா என்று ஆராய்வது. ஆராய்ச்சியின் முடிவு என்ன? இந்த 'நான்' எனது இந்த உடல் அல்ல, மனம் அல்ல, புத்தியல்ல, இது அல்ல, இது அல்ல என்று இறுதியில் கேள்வி கேட்போனும், கேட்கப்படு பொருளும் ஒன்றிவிடும். அதுவே நான் அற்ற நிலை. அந்த நிலையில் நான் 'அவன்' மயமாகி விடுகிறது. ஆமாம், 'நானே அவன்' அதாவது 'தத்த்வமஸி' என்ற பெருநிலை. இது ஞான மார்க்கம். பக்தன், ஞானி இருவரது இலட்சியம் ஒன்றுதான். இருவருடைய குறிக்கோளும் இந்தப் பொல்லாத 'நானை' அகற்றுவதேயாகும்.

இந்த 'நான்' என்னும் அகந்தை எந்த வடிவிலும் வரலாம். 'நான் நிறையப் படித்தவன்', 'நான் அழகி', 'நான் சிறந்த பாடகி', 'நான் சிறந்த பேச்சாளன்', 'நான் சிறிய பக்தன்', 'நான் உயரிய துறவி', 'நான் தன்னலமற்ற சமூகத் தொண்டன்' என்று இப்படி எத்தனையோ வடிவங்களில் அது வரும். எந்த வடிவில் வந்தாலும் அகந்தை பொல்லாததுதான்; ஒருவனுக்கு அழிவைத் தரக் கூடியதுதான்.

படிப்படியான பயிற்சியின் மூலம் இந்த 'யான்', 'எனது' என்ற இரண்டின் பிடிப்பிலிருந்து நாம் விடுபட முடியும். ஆனால் இந்தப் பாதை கத்தி முனைப் பாதைக்கு நிகர். மிகுந்த கவனம் வேண்டும். 'என்னிடம் ஆணவம் இல்லை, அகந்தை இல்லை' என்று திரும்பத் திரும்பப் பிறரிடம் எடுத்துக் கூறுவதும் ஒரு விதத்தில் அகந்தையாகிவிடும்.

எனவே, செய்யும் அனைத்தையும் இறைவனுக்கு அர்ப்பணமாக்கி, அவன் கையில் செயற்படும் ஒரு கருவியாகக் கருதி, நாம் செயலில் ஈடுபடுவோமேயானால் நாம் அனைத்துக் காரியத்திலும் வெற்றி பெற முடியும். மனதிலும் அமைதி நிலவும். அத்தகைய மனஅமைதியைப் பெற்று விளங்குவோமாக. *

# என் தேவன் வருவார் !

ஏ. சுப்பிரமணியம், எம்.ஏ.

சுவாமி விவேகானந்தர் தமது உடலை விடுவதற்காகத் தயார் செய்து கொண்டிருந்த நேரம். தாம் மறைவதற்குள் தம் குருநாதர் ஸ்ரீராம கிருஷ்ணர் பெயரால் தாம் உண்டாக்கிய மடமும் சங்கமும் யாருடைய தூண்டுதலும் இல்லாமல், தாம் ஏற்படுத்தியுள்ள ஒழுங்கு முறைகளோடு தாமாகவே இயங்கும் ஆற்றலைப் பெற்றுவிட வேண்டுமென்று நினைத்தார். அதனுல் மடத்தில் இருந்த தம் சகோதரச் சன்னியாசிகளுக்கும், சீடர்களுக்கும், பிரம்மசாரிகளுக்கும் கடுமையான பயிற்சிகளைக் கொடுத்து வந்தார்.

### அறைக்குள் !

மாலைநேரத்தில் ஒவ்வொரு சன்னியாசி—பிரம்மசாரியின் அறைக்குள் போவார். அவர்கள் அறையை எப்படி வைத்திருக்கிருர்கள் என்றும் பார்ப்பார்.

### சுவாமி ஆத்மானந்தர்

அப்போது பேலூர் மடத்தில் இருந்த துறவிகளில் சுவாமி ஆத்மானந்தரும் ஒருவர். அவர் தமது அறையையும் படுக்கையையும் எப்போதும் அழகாகவும் தூய்மையாகவும் வைத்துக்கொள்வார். தலையணை உறைகள் எப்போது பார்த்தாலும் அப்போதுதான் துவைத்துப் போட்டன போல் இருக்கும். மெத்தைப் பஞ்சில் ஒரு நெருடல் நெளிவு இல்லாமல் எல்லா இடமும் மெத்தென்று இருக்கும். மழைக் காலமானுலும் வெயில் காலமானுலும் மெத்தையைப் புத்தம் புதியது போல் வைத்திருப்பார். மெத்தையின் மீது அழகான விரிப்பு இருக்கும்.

### உறங்கிவிடுவார் !

விவேகானந்தர் ஒவ்வோர் அறையாகப் பார்த்துக் கொண்டு ஆத்மானந்தரின் அறைக்கு வந்ததும், அந்த அறையின் துப்புரவையும் படுக்கையின் அழகையும் பாராட்டுவார். சில நாட்கள் கொஞ்ச நேரம் அந்தப் படுக்கையில் படுத்து இருந்து விட்டும் செல்வார். அந்தப் படுக்கை அவ்வளவு அழகாகவும் சுகமாகவும் இருக்கும்.

### காலமாகிவிட்டார் !

விவேகானந்தர் மறைந்துவிட்டார்! சுவாமி ஆத்மானந்தர் தம் அறையில் படுக்கையை முன்பு போலவே ஒவ்வொரு நாளும் அழகாகவும் தூய்மையாகவும் சுகமாகவும் அமைத்தார். ஆனுல் அந்தப் படுக்கையில் அவர் உறங்குவதில்லை. இரவு கழிந்து காலை விடிந்ததும், அந்தப் படுக்கையை ஒருவர் படுத்து எழுந்து சென்றுவிட்டது போல் சுத்தம் செய்வார். போர்வையைத் துவைத்துப் போடுவார். தலையணை உறைகளை மாற்றுவார். படுக்கை மீது அழகான விரிப்பை விரிப்பார். கொசுவலையைக் கட்டி வைப்பார்.



—ஒவ்வோர் இரவும் சுகமாக உறங்கும் ஒரு பேரரசனுக்காகப் படுக்கையைத் தயாரிப்பது போல அந்தச் சன்னியாசி படுக்கையைத் தயாரிப்பார். ஆனுல் தாம் மட்டும் தரையில் மற்ருெரு படுக்கையில் படுத்து உறங்குவார்.

ஒரு நாள் திடீரென்று அவருடைய சகோதரத் துறவி ஒருவர் ஏதோ ஓர் அவசர காரியமாக, அவருடைய அறையின் கதவைத் தட்டி உள்ளே வந்தார். பார்த்தால் ஆத்மானந்தர் தரையில் படுத்துக்கொண்டிருக்கிருர். கட்டில் தூரத்தில் இருக்கிறது! ஆச்சரியத்தோடு அவர், "என்ன இது? படுக்கை அங்கே இருக்கிறதே! நீ கீழே படுத்துக்கொண்டிருக்கிருயே!" என்று கேட்டார்.

### என் தேவன் வருவார்!

ஆத்மானந்தர் அந்தப் படுக்கையைப் பார்த்துக் கொண்டு சொல்ல ஆரம்பித்தார்: "சுவாமிஜி*

* சுவாமி விவேகானந்தர்

உயிரோடு இருந்தபோது அடிக்கடி என் அறைக்கு வருவார். நான் படுக்கையை வைத்திருக்கும் முறையை மிகவும் பாராட்டுவார். அதில் படுத்துத் தூங்கிவிட்டும் போவார். அவர் காலமாகிவிட்ட பிறகு அவரை நினைத்தபடியே இந்தப் படுக்கையில் படுத்துக் கண்ணீர் வடித்துக்கொண்டிருப்பேன். ஒரு நாள் இரவு ஏதோ கனவு. அதில் சுவாமிஜி என் படுக்கையில் படுத்துக்கொண்டிருப்பது போல் தோன்றியது. திடீரென்று கண்திறந்து எழுந்து பார்த்தேன்!

''ஆமாம்! படுக்கையில் சுவாமிஜிதான் உறங்கிக் கொண்டிருக்கிறார்! கனவு மயக்கமோ என்று கண்களைத் துடைத்துக்கொண்டு பார்த்தேன். இல்லை, அது கனவு அல்ல. சுவாமிஜிதாம் உறங்கிக் கொண்டிருக்கிறார். கொஞ்ச நேரத்திற்குப் பிறகு அவர் உருவம் மறைந்துவிட்டது!

''எனவே, என் தேவன் இனி எப்போதும் எந்த நேரத்திலும் இங்கே வரலாம்; இந்தப் படுக்கையில் படுக்கலாம்! அந்தத் தேவனுக்காகவே நான் இந்தப் படுக்கையை ஒவ்வொரு நாளும் தயார் செய்கிறேன். அவரை எதிர்பார்த்தே நான் இங்கே தரையில் படுத்துக் கிடக்கிறேன். என் தேவன் வருவார்! நிச்சயம் இன்னொரு நாள் வருவார்! நிச்சயம் இந்தப் படுக்கையில் உறங்குவார்'' என்றார்.

இரண்டு சன்னியாசிகளின் கண்களிலும் நீர் வடிந்தது. அந்தத் தேவன் அப்போதே அங்கே வந்துவிட்டது போல் அவர்களின் தலைகள் படுக்கையை நோக்கிக் குனிந்தன. தரைமீது படிந்து வணங்கின.

○ ○




## குருதேவர் ஸ்ரீராமகிருஷ்ணர் வரலாறு

[ஆசிரியர்: அ. லெ. நடராஜன், வெளியிட்டோர்: கற்பக நிலையம், 9, 3-ஆவது தெரு, பாரதி நகர், சென்னை—600 017; பக்கங்கள் 435. விலை: ரூ.15]

உலகப் பெரியோர்களின் வரலாறுகளை எழுதிப் புகழ்பெற்ற திரு அ. லெ. நடராஜன் அவர்கள் முன்பு 'சுவாமி விவேகானந்தர் வரலாறு' என்னும் நூலை விரிவாக எழுதியிருந்தார். அடுத்து இப்போது அவர் 'குருதேவர் ஸ்ரீராமகிருஷ்ணர் வரலாறு' என்னும் இந்த நூலை எழுதித் தாமே தமது பதிப்பகத்தின் சார்பாகப் பிரசுரித்துள்ளார்.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரைப்பற்றிச் சிறிய அளவிலும் பெரிய அளவிலும் பல நூல்கள் தமிழில் வெளிவந்துள்ளன. அவற்றுள் சில நூல்கள் வாழ்க்கை நிகழ்ச்சிகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து எழுதப்பட்டுள்ளன. மற்றும் சில நூல்கள் வரலாற்று நிகழ்ச்சிகளுக்கும் போதனைகளுக்கும் முக்கியத்துவம் கொடுத்து எழுதப்பட்டுள்ளன. இப்போது மதிப்புரைக்கு வந்துள்ள இந்த நூலில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்வு—வாக்கு ஆகிய இரண்டிற்கும் நல்ல முக்கியத்துவம் கொடுத்து எழுதப்பட்டிருக்கிறது.

ஆசிரியர் இந்த நூலில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் வரலாற்றை மிகவும் எளிய இனிய தமிழில் சுவைபடக் கோவையாகச் சுமார் 365 பக்கங்களில் எழுதியுள்ளார். பரமஹம்சதேவரின் வாழ்க்கையில் நடைபெற்ற முக்கிய நிகழ்ச்சிகளில் எதுவும் இந்த நூலில் விடுபடவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இடையிடையே தொடர்புடைய இடங்களில் குருதேவரின் உபதேச மொழிகளும் இடம்பெற்றுள்ளன, அது தவிர, நூலின் பிற்பகுதியில் கடவுள், பெண்ணும் பொன்னும், மாயையின் இயல்பு, கல்விச் செருக்கு, பணமோகம், சித்தாடல்கள், ஞானநெறி, குரு அவசியமா?, உண்மை ஞானி, குருவும் சீடனும், இளமையில் இறைபக்தி, சத்சங்கம் போன்ற தலைப்புகளின் கீழ், சுமார் 65 பக்கங்களில் குருதேவரின் உபதேசங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இரத்தினச் சுருக்கமாக அமைந்துள்ள இந்த நூல், தொடக்கத்தில் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றியும் வேதாந்தத் தத்துவங்களைப் பற்றியும் அறிந்து கொள்ள விரும்புபவர்களுக்குப் பெரிதும் பயன்படும் என்பது நிச்சயம்.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரைப் பற்றி இதுவரையிலும் தமிழில் பல நூல்கள் வெளிவந்துள்ளன. அவற்றில் எளிய நடையும் கருத்தோட்டமும் சுவையும் கொண்ட நூலாக இது முதல் தரமாக அமைந்திருக்கிறது என்பதில் யாருக்கும் கருத்து வேற்றுமை இருக்க முடியாது. தமிழ் மக்களிடையே இந்த நூல் மிகுந்த வரவேற்பைப் பெறும் என்பது உறுதி.

—பிரம்மசாரி நிரஞ்ஜன சைதன்யா

# அருள்நெறிக் கதை

## அன்னதானத்தின் மகிமை

பிரம்மசாரி நிரஞ்ஜன சைதன்யா

சத்தியபுரி என்பது அந்தப் பட்டணத்தின் பெயர். அந்தப் பட்டணத்திற்கு அக்கம்பக்கத்து ஊர்களுக்கு இல்லாத ஒரு தனிச் சிறப்பு இருந்தது. அதுதான் முன்னோர் கட்டிவைத்த பிரம்மாண்டமான சிவன்கோயில். அதை நிர்வகித்து வந்த விசுவநாதர் பக்தியும் ஒழுக்கமும் நிரம்பியவர். அவருக்கு வாய்த்த தர்மபத்தினியும் கணவனுக்கு இணையாக நல்லொழுக்கங்களுடன் திகழ்ந்தாள்.

விசுவநாதர் பிறந்தபோது, ''இந்தக் குழந்தைக்கு இதுதான் கடைசிப் பிறவி. இவர் ஒரு குழந்தைக்குத் தந்தையானதும் துறவறம் மேற்கொள்வார். அந்த வாழ்க்கையின் மூலம் பிரம்மஞானம் அவருக்கு வாய்க்கும். அவர் துறவறம் மேற்கொள்ள விரும்பும் பொழுது உறவினர் யாரும் அவரைத் தடுக்க வேண்டாம். அவ்விதம் தடுப்பதனால் பயன் ஒன்றும் ஏற்படாது. அவருடைய போக்கிற்கு விட்டு விடுங்கள்'' என்று அவருடைய ஜாதகத்தைக் கணித்த ஜோதிடர்கள் குறிப்பிட்டிருந்தார்கள்.

விசுவநாதர் பசிப்பிணி போக்கும் மருத்துவர் போல் விளங்கினார். தம்மை அண்டின ஏழை எளியவர்களுக்கு அவர் அயராமல் அன்னம் பாலித்தார். இறைவன் திருவருளால் அவருக்குப் போதிய செல்வம் இருந்தது. அவருடைய அன்னதானப் பணிக்கு எந்தக் காலத்திலும் தடை ஏற்படவே இல்லை.

அந்தத் தம்பதிகளுக்கு ஒரு குழந்தை பிறந்தது. அதற்குக் குணசீலன் என்று தம்பதிகள் அன்புடன் பெயர் சூட்டினர்.

ஒரு நாள் இரவு விசுவநாதர் ஒரு கனவு கண்டார். அந்தக் கனவில் அவர், குற்றாலத்தில் உறையும் சிவபெருமான் தம்மை அழைத்துச் சன்னியாச தீட்சை தருவது போல உணர்ந்தார். அதே கனவில் அவர் தம்மிடம் சிவபெருமான், ''வா, நீ என்னைச் சேர்ந்தவன். நீ என் சொத்து. என்னிடமே விரைந்து வா'' என்று கூறுவதைக் கேட்டார்.

விசுவநாதர் தமக்கென வாய்த்த கடமைகளை அறநெறியினின்றும் பிறழாமல் நடத்தி வந்தார். அவர் அனுஷ்டித்து வந்த ஸ்வதர்மமே அவருக்குப் போதிய மனப் பரிபாகத்தைத் தந்திருந்தது.



விசுவநாதர் கண்ட கனவு அவர் உள்ளத்திலிருந்து ஏதோ ஒருவிதப் படலத்தை அல்லது திரையை விலக்குவது போல இருந்தது. அவர் குற்றால மலைச்சாரலை நோக்கித் துறவியாகச் சென்றுவிட்டார்.

விசுவநாதர் சென்றபிறகும் அவருடைய மனைவி, தான் சிரமப்பட்ட நிலையிலும் கணவன் விட்டுச் சென்ற அன்னதானப் பணிக்கு ஒரு குறைவும் வராமல் தொடர்ந்துகொண்டிருந்தாள்.

ஒரு நாள் சிறுவனான குணசீலன், ''அம்மா, நீ நாள்தோறும் இப்படி அன்னதானம் செய்கிறாயே; இதற்கு என்ன காரணம்? இவ்விதம் அன்னதானம் செய்வதால் உள்ள செல்வமும் கரைந்துபோய் நாம்

வறுமையில் வாட நேருமே!'' என்று தாயைக் கேட்டான்.

அதற்கு அவள், ''மகனே! எனக்குக் காரணம் ஒன்றும் தெரியாது. உன் தந்தை இது போலவே அன்னதானப் பணியை மிகுந்த ஈடுபாட்டுடன் பல ஆண்டுகளாகச் செய்து வந்தார். அவருக்கு விருப்ப மானது என்பதால் நானும் அதைத் தொடர்ந்து செய்து வருகிறேன்; அவ்வளவுதான்'' என்றாள்.

தாயின் பதில் குணசீலனைச் சிந்திக்க வைத்தது. ''எந்தச் செயலுக்கும் பலன் உண்டு என்று முன் னோர் கூறியிருக்கிறார்கள். அதன்படி பார்த்தால் அன்னதானப் பணிக்கும் ஏதாவது பலன் இருக்க வேண்டும் அல்லவா? அது என்ன பலன் என் பதைக் காடு சென்று நான் கடுந்தவம் இயற்றி அறிந்துகொள்ளப்போகிறேன்'' என்று தாயிடம் குணசீலன் தெரிவித்தான்.

அவனுடைய யோசனையைத் தாயும் மனமுவந்து அங்கீகரித்து வாழ்த்துக் கூறினாள். ஒரு வீரனைப் போலத் தவ வாழ்க்கைக்குச் செல்லும் மகனை அவள் ஆசீர்வதித்தாள்.

மகனுக்கு வேண்டிய உணவு போன்றவற்றை அவள் ஒரு மூட்டையாகக் கட்டினாள். குணசீலன் தன் தாயை மும்முறை வலம் வந்து வணங்கி அவ ளுடைய ஆசியைப் பெற்றான். பிறகு அவள் தந்த மூட்டையுடன் காடுநோக்கிப் புறப்பட்டான்.

வழியில் பசியால் வருந்திய ஒரு வயோதிகரைச் சிறுவன் சந்தித்தான். அன்னதானத்திற்கே பெயர் பெற்ற குடும்பத்தில் பிறந்தவன் அல்லவா குண சீலன்? அவன் தாய் தந்த உணவை வயோதிக ரிடம் கொடுத்துவிட்டுத் தன் பிரயாணத்தைத் தொடர்ந்தான்.

பொழுது சாய்ந்தது. இருள் சூழ்ந்துவிட்டதனால் அதற்கு மேல் சிறுவனால் பயணத்தைத் தொடர இயலவில்லை. 'இனி என்ன செய்வது?' என்று அவன் காட்டில் தயங்கி நின்றபோது, வேடன் ஒரு வன் தற்செயலாக அங்கு எதிர்ப்பட்டான். அவன் குணசீலனிடம், ''தம்பி, அகால வேளையில் கொடிய மிருகங்கள் நடமாடும் இடத்திலே நின்று கொண்டிருக்கிறாயே! எந்த நிமிடமும் மிருகங்களால் உனக்கு ஆபத்து நேருமே?'' என்று கேட்டான்.

சிறுவன் வேடனிடம், ''ஐயா! என் தாயின் அனு மதியுடன் அன்னதானத்தின் சிறப்பை அறியும் பொருட்டுத் தவம் பழக வந்திருக்கிறேன். இன்னும் நீண்ட தூரம் போக வேண்டும்'' என்று தெரிவித் தான்.

வேடன், ''உன் நோக்கம் சரியானதுதான். ஆனால் கொடிய மிருகங்களிடமிருந்து ஆபத்து நேராம லிருக்க இன்று இரவை நீ என்னுடன் கழித்துவிட்டுக் காலையில் உன் பயணத்தைத் தொடங்கலாம்'' என்று சொல்லி, குணசீலனைத் தன் இருப்பிடத் திற்கு அழைத்துச் சென்றான்.

வேடன் நல்லவன். அவன் மனைவி அவனுக்கு நேர்மாறானவள். கணவன் ஒரு பையனைத் தன் னுடன் அழைத்து வந்ததைக் கண்டு அவள் முகத் தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன. மிகுந்த கோபத்துடன் அவள், ''ஏது, நமக்கே உணவு இல்லாதபோது விருந்தாளி ஒருவனையும் அழைத்து வந்துவிட்டீரோ? அழகுதான்!'' என்று சீறினாள்.

வேடன், ''பரவாயில்லை. நீ சிரமப்பட வேண் டாம்; என் பங்கு உணவைத் தம்பியுடன் பகிர்ந்து கொள்கிறேன்'' என்று தெரிவித்து, அவ்விதமே செய்தான். மூவரும் உணவு உண்டனர்.

காட்டு மிருகங்களின் ஆபத்தைத் தவிர்க்கக் கணவனும் மனைவியும் பரண் மீது உறங்குவது வழக்கம். வேடன் குணசீலனை மரத்தின் மீது இருந்த பரண்மீது ஏற்றித் தனக்கும் தன் மனைவிக் கும் இடையில் படுக்க வைத்தான். ''இந்தச் சிறு வன் என் அருகிலே படுக்கக்கூடாது. பரணில் பாதி இடத்தை எனக்குக் கொடுத்துவிட்டு மீதி இடத்தில் நீங்களும் பையனும் வேண்டுமானால் படுத்துக் கொள்ளுங்கள்'' என்று வேடனின் மனைவி மீண்டும் உறுமினாள்.

வேடனுக்கு மனைவியின் போக்கு மிகுந்த மன வேதனையைத் தந்தது.

அவன் மனைவிக்கும் பையனுக்கும் இடையில் படுத்துக்கொண்டான்; குணசீலன் கீழே விழுந்து விடாதவாறு அணைத்துக்கொண்டே தூங்காமல் கண் விழித்திருந்தான்.

நடு இரவில் மனைவியும் சிறுவனும் ஆழ்ந்து உறங் கிக்கொண்டிருந்த சமயத்தில், வேடன் தனக்கும் மனைவிக்கும் இடையில் குணசீலன் உறங்கும் வகை யில் பரணின் ஒதுக்குப்புறமாகப் படுத்துத் தூங்க ஆரம்பித்தான். விரைவில் உறங்கியும் விட்டான்.

நள்ளிரவில் கண் விழித்த மனைவி, 'இடைஞ்ச லாக வந்து சேர்ந்த இந்தப் பையனைத் தொலைத்து விட வேண்டும்' என்று நினைத்தாள். இரவு நேர மானதால் பரணின் ஓரமாக ஒதுங்கிப் படுத்திருப்

பவன் வேடன் என்பதையும், தன் பக்கத்தில் படுத்திருப்பவன் சிறுவன் என்பதையும் அவளால் உணர்ந்துகொள்ள முடியவில்லை. பரணின் ஓரத்தில் ஒட்டிப் படுத்திருந்த தன் கணவனைக் குணசீலன் என்று நினைத்த அவள், மெதுவாக அவனை உருட்டிக் கீழே விழும்படி செய்துவிட்டாள். அது காரணமாக மகிழ்ச்சியும் கொண்டாள். கீழே விழுந்த வேடனைக் காட்டு மிருகங்கள் கொன்று விட்டன.

பொழுது புலரும் தறுவாயில் தற்செயலாக உறக்கம் கலைந்து எழுந்த குணசீலன் வேடனைக் காணுமல் திகைத்தான். பிறகு பரணிலிருந்து இறங்கி மேற்கொண்டு தன் பயணத்தைத் துவக்கினுன். பொழுது புலர்ந்ததும், கணவனை மிருகங்கள் கொன்றுவிட்டதை அறிந்த வேடனின் மனைவி நடந்ததை ஊகித்துத் தானும் இறந்துவிட்டாள்.

பிரயாணத்தின்போது குணசீலன் ஒரு முடவன் தன் குடிசையின் முன்னுல் கோல் ஊன்றி நின்று கொண்டிருப்பதைக் கண்டான். முடவன் குணசீலனிடம், எங்கே போகிருய் என்ன ஏது என்று விசாரித்தான். குணசீலன் தன் பயணத்துக்கான காரணத்தை விவரித்தான்.

அதைக் கேட்ட முடவன், ‘‘அப்படியானுல் தம்பி, நீ எனக்காக ஒரு காரியம் செய். எனக்குப் பசியே எடுப்பதில்லை. அதற்கான காரணத்தையும் நீ தவமிருக்கப் போகும் தேவதையிடம் விசாரித்து வா’’ என்று கேட்டுக்கொண்டான். குணசீலன் அவ்விதமே செய்வதாக வாக்களித்தான்.

மேலும் அவன் சென்றுகொண்டிருந்தபோது ஒரு நல்ல பாம்பு வருவதைக் கண்டான். நாகம், குணசீலனிடம் பிரயாணத்திற்கான காரணத்தை விசாரித்தது. அவன் முடவனிடம் தெரிவித்த அதே விவரங்களைப் பாம்பிடமும் தெரிவித்தான். அதைக் கேட்ட பாம்பு, ‘‘பையனே! நான் சரியாகக் கண் தெரியாமல் அவதிப்படுகிறேன். இந்தச் சிரமத்திலிருந்து விடுபட நான் என்ன செய்யலாம் என்பதைத் தயவுசெய்து தேவதையிடம் கேட்டு வா’’ என்று வேண்டியது. குணசீலன் அதன் கோரிக்கைக்குச் சம்மதித்தான். பாம்பு அருகில் இருந்த தன் இருப்பிடத்தையும் குணசீலனுக்குக் காட்டியது.

மேலும் அவன் நடந்து சென்றபோது ஏராளமான பழங்கள் பழுத்துக் குலுங்கும் மாமரம் ஒன்றைக் கண்டான். அந்த மரம், ‘‘என்னுடைய எல்லாக் கனிகளிலும் புழுவும் பூச்சியும் உற்பத்தியாகி விடுகின்றன. அதனுல் மக்கள் என் கனிகளைப் பயன்படுத்துவதே இல்லை. என் பழங்களில் புழுவும் பூச்சியும் அரிக்காமலிருந்து மக்களுக்கு நான் பயன்பட வேண்டுமானுல், அதற்கு நான் என்ன செய்ய வேண்டும் என்ற விவரத்தைத் தேவதையிடம் விசாரித்துத் திரும்பி வரும்போது எனக்குச் சொல்ல வேண்டும்’’ என்று பிரார்த்தித்தது. குணசீலன் அவ்விதமே செய்வதாக ஒப்புக் கொண்டான்.

சிறுவன் காட்டை அடுத்து உயர்ந்திருந்த மலைச் சிகரத்தை அடைந்தான். அங்கே ஓரிடத்தில் அமர்ந்து, தேவதையை நினைத்துக் கடுந்தவம் பழகினுன். சிறுவன் எனினும் நல்ல சம்ஸ்காரம் இருந்ததனுல் அவனுல் கடுந்தவம் இயற்ற முடிந்தது. தூய நோக்கத்துடன் அமைந்த பாலகனின் தவம் வீணுகவே இல்லை. தேவதை அவனுடைய தவத்திற்கு இரங்கி அவன் முன் தோன்றி, ‘‘குழந்தாய், உனக்கு என்னவெல்லாம் வேண்டுமோ தாராளமாகக் கேள். நீ கேட்பது அவ்வளவும் உனக்குத் தரப்படும்’’ என்று சொன்னது.

குணசீலன், ‘‘தேவதையே, எனக்காக எதையும் கேட்கும் நோக்கம் எனக்கு இல்லை. அன்னதானம் செய்வதன் பலனைப்பற்றி அறிய விரும்புகிறேன்’’ என்ருன்.

தேவதை, ‘‘மகனே, உன் கேள்விக்கான பதிலை நீயாகவே அறிந்துகொள்ளச் செய்கிறேன். உன் நாட்டு அரசனுக்குப் பத்து மாதம் கழித்துக் காலை 5-30 மணிக்கு ஓர் ஆண்குழந்தை பிறக்கப் போகிறது. நீ அரசனைச் சென்று சந்தித்து, பிறக்கும் குழந்தையின் உடல், தரையின்மீது படுவதற்குள்ளாக அதைத் தங்கத் தாம்பாளத்தில் ஏந்தும்படி செய்து, அந்தக் குழந்தையிடம் அன்னதானத்தின் பலனைப் பற்றிக் கேள். அது கூறும் பதிலில் அன்னதானத்தின் மகிமையை அறிந்துகொள்வாய்’’ என்று தெரிவித்தது.

அடுத்தபடி குணசீலன், முடவன் பாம்பு மாமரம் ஆகியவற்றின் சந்தேகங்களையும் தேவதையிடம் தெரிவித்து அவற்றுக்கான பதில்களைத் தெரிந்து கொண்டான்.

தேவதை, ‘‘மேலும் உனக்குத் தேவையானதைத் தயங்காமல் கேள்’’ என்றது. குணசீலன்

தனக்கென்று எதுவுமே வேண்டாம் என்று தெரிவித்துவிட்டான். தேவதை அவனை ஆசிர் வதித்து மறைந்தது.

குணசீலன் மீண்டும் ஊர் திரும்பும் வழியில் மாமரம் அவனை வரவேற்றது. அதனிடம் அவன், ''மாமரமே! கடந்த பிறவியில் நீ பெரும் பணக்கார னாக இருந்தாயாம். ஆனால் உன் பணத்தை ஒரு சிறிதுகூடப் பிறருக்குப் பயன்படுத்தாமல் உலோபி யாகவே இருந்தாயாம். நீ எந்த இடத்தில் உன் செல்வத்தை ஏராளமான தங்கக் கட்டிகளாக மாற்றிப் புதைத்து வைத்திருந்தாயோ, அதே இடத்தில் இப்போது மாமரமாக வளர்ந்திருக்கிறாய். நீ உன் செல்வத்தைப் பிறருக்குப் பயன்படுத்தா திருந்த காரணத்தினால்தான் உன் கனிகள் புழுத்துப் போகின்றன'' என்று தேவதை கூறியதைத் தெரி வித்தான். காரணத்தை அறிந்த மாமரம், ''இதைக் கேட்டு வந்ததற்கு மிக்க நன்றி. தயவுசெய்து நீயே இந்தத் தங்கக் கட்டிகளையும் ஏற்றுக்கொள்ள வேண்டும்'' என்று பிரார்த்தித்தது.

குணசீலன் தங்கக் கட்டிகளுடன் ஊர் திரும்பும் வழியில் நாகப்பாம்பு அவனை வரவேற்றது. அவன், ''பாம்பே, நீ மாணிக்கக் கல் வைத்திருக்கிறாயாம். அதை யாருக்காவது நீ கொடுத்துவிட்டால் உன் கண்பார்வை சரியாகிவிடும் என்று தேவதை கூறியது'' என்றான். பாம்பு உடனே, மாணிக்கக் கல்லைக் கக்கி வெளியே எடுத்து, ''அப்படியானால் காரணத்தை அறிந்து வந்த நீயே இந்த மாணிக் கத்தை எடுத்துக்கொள்'' என்று வேண்டியது.

குணசீலன் மாணிக்கத்துடன் சென்றபோது முடவன் அவனை வரவேற்றான். முடவனிடம் அவன், ''நீங்கள் அறிந்துள்ள கலையைப் பிறருக்குப் போதிக்க வேண்டும். அவ்விதம் செய்யாததனால் உங்களுக்குப் பசியின்மை இருப்பதாகத் தேவதை தெரிவித்தது'' என்றான். முடவன், ''அப்படியா? மிக்க நன்றி. நான் அறிந்த கலையை உனக்கே போதிக்கிறேன்'' என்று சொல்லி, குணசீலனுக்குத் தான் அறிந்த கலையைக் கற்பித்தான்.

குணசீலன் அரசனின் மாளிகையை அடைந் தான். மன்னனைச் சந்தித்து, ''அரசே! பத்து மாதங்களுக்குப் பிறகு தங்களுக்கு ஓர் ஆண் குழந்தை பிறக்கப்போகிறது'' என்று நாள் நேரம் ஆகியவற்றைத் திட்டவட்டமாகவும் தேவதை சொன்ன ஏனைய விவரங்களுடனும் தெரிவித்தான்.

குணசீலன் சொன்னதைக் கேட்டு மன்னன் ஆச்சரியமும் ஆனந்தமும் கொண்டான். அந்தக் குழந்தை பிறக்கும் வரையிலும் குணசீலனை அரண்மனையிலேயே தங்க வைத்து உபசரித்தான்.

குணசீலன் குறிப்பிட்ட காலம் நெருங்கியது. அரசன், குணசீலன் சொன்னபடியே அந்தப்புரப் பெண்களை அழைத்து, ''பிறக்கும் குழந்தை தரை யில் விழுமுன் தங்கத் தாம்பாளத்தில் அதை ஏந்திக் கொண்டு வாருங்கள்'' என்று கட்டளை பிறப்பித்தான்.

பெண்கள் அவ்விதமே குழந்தையைக் கொண்டு வந்தனர். குணசீலன், ''குழந்தையே! அன்ன தானத்தின் பலனைப் பற்றித் தெரிவிப்பாயாக'' என்றான். குழந்தைக்குத் தேவதையின் திருவருளால் முற்பிறவியின் நினைவு வந்தது. அது, ''உன்னை நான்தான் வேடனாகக் காட்டில் சந்தித்தேன். அப் போது நான் உனக்கு உணவு அளித்ததன் பய னாகவே இப்போது அரசகுமாரனாகப் பிறந்திருக் கிறேன். எனது அந்தச் செயலைத் தடுத்த என் மனைவியோ இப்போது இதே ஊரில் உள்ள சேரியில் பன்றியாகப் பிறந்திருக்கிறாள்'' என்று சொன்னது.

அன்னதானத்தின் சிறப்பைக் குழந்தையிடம் அறிந்த குணசீலன் ஊர் திரும்பினான். தான் கிளம்பியது முதல் நடந்தவை அனைத்தையும் தாயிடம் விளக்கினான். அன்னதானத்தின் பெருமையைக் கேட்ட அவள் மிகவும் மகிழ்ந்து எப்போதும் போலவே விருந்தினரை உபசரித்து வாழ்ந்து முடிவில் நற்கதி பெற்றாள். ☆



பிரம்மத்தைப் பற்றிய ஆராய்ச்சியில் (விசாரத்தில்) ஒரு கணமேனும் ஈடு பட்ட மனதைக் கொண்ட உத்தமன் எல்லாப் புண்ணிய தீர்த்தங்களிலும் நீராடிய பலனைப் பெறுகிறான்; பெரும் பூமிதானத்தைச் செய்த பலனையும் ஆயிரம் யாகங்கள் செய்த புண்ணியத்தையும், முப்பத்துமுக்கோடி தேவன்மார்களைப் பூஜித்த பலனையும் அடைகிறான். தன் பித்ருக்களைப் பிறவிக்கடலிலிருந்து மீட்கிறான்; மூவுலகமும் இவனைப் பூஜிக்கிறது.

—ஸ்மிருதி

# நீறு அணியும் உருவம்

வாகீசகலாநிதி **கி. வா. ஜகந்நாதன்**

காரைக்காலம்மையாருக்கு இப்போது ஒரு சந்தேகம் வந்துவிட்டது. இறைவனிடம் அன்பு கொண்டு, தாயாகவும் பக்தராகவும் நெருங்கிப் பேசும் உரிமையைப் பெற்றவர் அவர். அப்படி நெருங்கிப் பார்க்கும்போது இறைவனுடைய திருமேனியைக் கூர்ந்து கூர்ந்து கவனிக்கிறார். அவன் அணிந்திருக்கும் பொருள்களையெல்லாம் உற்றுப் பார்க்கிறார். அவருடைய கற்பனை ஊறுகிறது. என்ன என்னவோ உவமைகள் தோன்றுகின்றன.



முரண்பாடுகள் பல காட்சியளிக்கின்றன. இறைவனைப்பற்றித் திருப்பித் திருப்பி எவற்றைச் சொல்வது? அவனுடைய கருணையையும் பெருமையையும் சொல்லிக்கொண்டே யிருக்கலாம். என்றாலும், இடையே சிறிது மாறுதல் வேண்டாமா? அப்போது தானே சலிப்புத் தட்டாமல் இருக்கும்?

ஆண்டவனை அவ்வப்போது கேள்வியைக் கேட்கிறார். ''இப்படியெல்லாம் செய்யப்படாது'' என்று அறிவுறுத்துகிறார். ''இவ்வாறு செய்ய வேண்டும்'' என்று வேண்டிக்கொள்கிறார். அவருக்குத் தோன்றும் ஐயங்களும், எழுப்பும் வினாக்களும், ஏதோ பெரிய கருத்துக்களைத் தெரிந்துகொள்வதற்காக அமைந்தவை அல்ல. இறைவனைப் பற்றியே பேசிப் பொழுது போக்க அவை உதவுகின்றன; வீண் பொழுது போக்காமல் இறைவனை எண்ணுவதற்கு உரிய வாய்ப்பை அளிக்கின்றன; சுவையாகவும் இருக்கின்றன.

உணவிலே ஒரே காயைப் பல வகையாகச் சமைத்து உண்பதில்தானே சுவை அதிகமாக உண்டாகிறது? அப்படி, ஆண்டவன் தோற்றத்தையும் இயல்புகளையும் தொடர்புபடுத்திப் பலபல வகையில் பாடுகிறார், காரைக்காலம்மையார்.

இறைவனுடைய நெற்றியைப் பார்க்கிறார். அவனுடைய தனிச் சிறப்பைக் காட்டும் அடையாளத்தை அங்கே பார்க்கிறார். வேறு யாருக்கும், அதாவது அந்தக் குடும்பத்தினர் அல்லாத வேறு யாருக்கும், அந்த அடையாளம் இல்லை. அதுதான் ஞானக் கண்ணாகிய நெற்றிக் கண். 'இமையாத முக்கண் மூவயிற் பெற்றவன்' அவன். அக்கினியே நெற்றிக்கண்ணாக இருக்கிறது. அக்கினிக்கு ஒளி விடும் தன்மையும் எரிக்கும் இயல்பும் உள்ளன. இறைவனுடைய நெற்றிக் கண்ணுக்கு ஞான ஒளி வீசும் சிறப்பும், அஞ்ஞானத்தையும் ஆசையையும் அழிக்கும் திறமையும் உண்டு. ஞான ஒளி வீசும் தன்மை இருப்பதால், ஞானமே வடிவாகிய குமாரன் அந்தக் கண்ணிலிருந்து தோன்றினான். தீயவற்றை அழிக்கும் ஆற்றலால் மாரனை அது எரித்தது. குமாரஜனனமும் மாரவதமும் அந்தக் கண்ணின் இரண்டு வகை ஆற்றலினாலும் விளைந்த விளைவுகள்.

இறைவனிடம் உள்ள மற்றொரு சிறப்பான அடையாளம் அவனுடைய நீலகண்டம். அதை நினைப்பதில் அம்மையாருக்கு ஆர்வம் மிகுதி. அந்தக் கண்டம், இறைவன் எதனாலும் அழியாத நித்தியன் என்பதையும் பெருங் கருணையாளன் என்பதையும் விளக்கிக்கொண்டிருக்கிறது. ''விண்ணோர் அமுதுண்டும் சாவ ஒருவரும், உண்ணாத நஞ்சு உண்டு இருந்து அருள் செய்குவாய்'' என்று இளங்கோ வடிகள் பாடுகிறார். 'நம்மை அழித்துவிடுமே' என்று அஞ்சித் தேவர் யாரும் அதன் பக்கத்திலே போகவில்லை. இறைவன் அதை அநாயாசமாக உண்டு, அதனால் அழிவோ மயக்கமோ இல்லாமல், நிச்சலனாக இருக்கிறான். இது அவனுடைய நித்தியத்துவத்

தைக் காட்டுகிறது. அந்த நஞ்சை உண்டதனுல் அப்போதைக்குத் தேவர்கள் இறந்துபடாமல் இருந்தனர்; தாம் விரும்பிய அமுதத்தை நுகரும் பேறு அவர்களுக்கு ஏற்பட்டது. இது சிவபெருமானுடைய கருணையைக் காட்டுகிறது.

இவ்வாறு அமைந்த இரண்டு அடையாளங்களையும் எண்ணி, ஆண்டவனை விளிக்கிருர், அம்மையார்.

கண்புணரும் நெற்றிக் கறைக்கண்டா!

உன்னைப் பற்றி முழுவதும் தெரிந்து கொள்ளாதவள் நான்.

யாரால்தாம் தெரிந்துகொள்ள முடியும்? மற்றவர்கள், உன் இயல்புகளைப் பற்றிய ஐயப்பாடு எழுந்தால் அதைப் போக்கும் வழி தெரியாமல் திண்டாடுகிருர்கள். வேறு யாரிடமாவது கேட்டுத் தெளியலாம் என்றுல், அவர்களும் தம் ஐயங்களுக்கு விடை கிடைக்காமல் தடுமாறுகிறவர்கள். இரண்டு நாள் பட்டினிக்காரன் மூன்று நாள் பட்டினிக்காரனிடம் போய்ப் பசியைத் தீர்த்துக்கொள்ள முடியுமா?

அம்மையாருக்கு அந்தச் சங்கடம் இல்லை. யாரைப்பற்றி அவருக்கு ஐயம் எழுகிறதோ, அவனை அணுகும் பக்குவமும், கேட்கும் உரிமையும் உடையவர். சாட்சிக்காரன் காலில் விழுவதை விடச் சண்டைக்காரன் காலில் விழுவது மேல் அல்லவா?

ஆகவே இறைவனிடமே கேட்கப் புகுகிருர்.

'நான் எத்தனை ஆராய்ந்து பார்த்தாலும் என் அறிவுக்கு இந்த விஷயம் புலப்படவில்லை. உன் பண்பு முற்றும் உணரும் ஆற்றல் இல்லாதவள் நான். ஆகையால் உன்னையே கேட்கிறேன். எனக்கு வேண்டிய தெளிவை நீயே பணித்தருள வேண்டும்' என்று தொடங்குகிருர்.

பண்பு உணர மாட்டாதேன் நீயே
பணித்துக் காண்.

இறைவன் தருமமாகிய இடபத்தின்மேல் ஊர்ந்து வருகிறவன்; தன் அடியார்கள் உள்ள இடங்களுக்குத் தானே வலியச் சென்று அருள் பாலிப்பவன். விடையில் எழுந்தருள்வதன் நோக்கமே அதுதான். அவன் ஆன் ஏற்றை, காளையை, ஊரும் எண்ணம் இடையிலே வருகிறது. தருமத்தை அவன் தாங்குகிருன்; பாதுகாக்கிருன். அவனைத் தருமமே இடபமாக வந்து தாங்குகிறது.

ஆன் ஏற்ருய்!

என்று மீண்டும் விளித்துச் சொல்கிருர்.

இறைவன் இறைவியைத் தன் இடப்பாதியாகக் கொண்டிருக்கும் கோலம் ஒன்று உண்டு. மாதிருக்கும் பாதியன் அவன்; அர்த்தநாரீசன். அப்படியே இரண்டு பாதி இணைந்த வேறு ஒரு கோலமும் உண்டு. அதே இடப் பாகத்தில் திருமாலை வைத்திருக்கும் மூர்த்தம் ஒன்று உண்டு. சங்கரநாராயண மூர்த்தி, கேசவார்த்தமூர்த்தி என்றும் அந்த மூர்த்தியை வழங்குவார்கள். அர்த்தநாரீசுவரத் திருக்கோலத்தைத் திருச்செங்கோட்டில் காணலாம். கேசவார்த்த மூர்த்தியைச் சங்கரநயினர் கோயிலில் தரிசிக்கலாம்.

இறைவன் தனியே இருக்கும்போது அவனுடைய திருமேனி முழுவதும் சண்ணித்த வெண்ணீறு ஒளிரும். நெற்றியில் நீறு, மார்பில் நீறு, உடம்பெங்கும் திருநீறுதான். அவனுடைய அடியார்களில் முழு நீறு பூசிய முனிவரென்றே ஒரு கூட்டத்தினர் உண்டு.

தனியாகக் கோலங்கொண்டு திருநீறே நிறையப் பூசும் இறைவன் அம்பிகையோடு இணைந்து மாதிருக்கும் பாதியனுக இருக்கும்போது அந்தக் கோலம் முழுதும் திருநீறு இருக்குமா? மாலிருக்கும் பாதியனுக இருந்தால் அப்பொழுதும் உடம்பு முழுதும் திருநீறு விளங்குமா?—இப்படி ஓர் ஐயப்பாடு அம்மையாருக்குத் தோன்றுகிறது.

'உன்னுடைய திருவுருவங்களுக்குள் பெண் புணரும் அந்த உருவம் நீறு அணியுமா? மாலோடு இணைந்திருக்கும்போது மாலிருக்கும் பகுதியும் நீறு அணியுமா?' என்ற ஐயம் எழுகிறது. 'எனக்கு உன் இயல்பை, பண்பை, உணர முடியாது; நீதான் எனக்கு விளக்க வேண்டும்; பணித்தருளவேண்டும்' என்கிருர். உமாதேவியும் திருமாலும் திருமேனி முழுதும் நீறு அணிவதில்லை. அது தெரிந்தும் அறியாதவரைப் போலக் கேட்கிருர். அம்பிகை நுதலில் நீறணிவாள். திருமாலும் நெற்றியில் நேரே நீற்றை அணிவதுண்டு; ''கரிய மேனிமிசை வெளிய நீறு சிறிதேயிடும்'' என்று திவ்யப் பிரபந்தத்தில் வருகிறது. இப்படிச் சிறிதளவு திருநீற்றை அணிந்தாலும் மேனி முழுவதும் அணிவதில்லை. என்றுலும், ஐயம் கொண்டவரைப் போல, ''அம்பிகையின் பகுதியிலா, திருமாலின் பகுதியிலா எங்கே நீறு இருக்கும்? நீறு அணிவது எவ்வுருவோ?'' என்று கேட்கிருர் அம்மையார்.

பண்புணர மாட்டாதேன்; நீயே பணித்துக் காண்;
கண்புணரும் நெற்றிக் கறைக்கண்டா,—பெண்புணரும்

# கடவுளைக் காட்டும் பாதைகள்

ஸ்ரீமத் சுவாமி வீரேச்வரானந்தஜி மகாராஜ்
தலைவர், ஸ்ரீராமகிருஷ்ண மடம்—சங்கம்



### வைராக்கியம்

**வை**ராக்கியம் என்றால் என்ன? வைராக்கியம் என்பது ஆசையற்று இருப்பது; புலன்களால் அனுபவிக்கிற இன்பங்கள் மீது ஆசையில்லாமல் இருப்பது. நம் மனதில் மறைந்திருக்கும் தவறான, துன்பம் தரும் ஆசைகளை, நல்ல ஆசைகளிலிருந்து வேறுபடுத்தி விலக்கிவிட வேண்டும். இந்தத் தவறான துன்பம் தருகிற ஆசைகள்தாம் நம் மனதில் அமைதியான குளத்தில் கல்லை வீசினால் அலைகள் எழுவது போன்று, சஞ்சலத்தை எழுப்புகின்றன.

ஒரு கல்லைக் குளத்தில் எறிந்தோமானால் நீரில் வட்டங்களும் அலைகளும் தோன்றுகின்றன. இவை நீரில் எதிரொலிக்கும் சந்திரனின் பிம்பத்தைக் காண முடியாதவாறு செய்கின்றன. அது போலவே ஆசைகள் நம் அமைதியான மனதில் அலைகளை எழுப்புகின்றன. அந்த அலைகளினால் மனதில் எதிரொலிக்கும் நம் இஷ்ட தெய்வத்தை நாம் காண முடிவதில்லை.

### மனம் தூய்மையடைய வேண்டும்

**இ**ந்த ஆசைகள் யாவும் விலக வேண்டும். நம் மனம் தூய்மையடைய வேண்டும். அதன் பின்பு தான் ஆழ்ந்த தியானம் கைகூடும். ஆனால் பொதுவாக நம்மில் யாரும் ஒழுங்காகத் தியானம் செய்வதில்லை. முறையாகப் பயிற்சியும் செய்வதில்லை. நாள்தோறும் கொஞ்ச நேரம் உட்கார்ந்துவிட்டு, மனம் அமைதியடைந்து தியானம் கைகூடிவிட்டது என்று நினைத்துக்கொண்டு எழுந்துகொள்கிறோம். இப்படி நாம் செய்யும் இத்தகைய செய்கையால் தியானம் கூடுவது முடியக்கூடிய காரியமல்ல. தியானம் கைகூட வேண்டும் என்றால் மனம் தூய்மையடைய வேண்டும். நம் மனமும் நம் இதயமும் முழுக்க முழுக்க உலக ஆசைகளால் நிரப்பப்பட்டுள்ளன. அங்கே கடவுள் வந்து அமருவதற்குச் சிறிதுகூட இடமே இல்லை. எனவே நாம் நம் மனதிலும் இதயத்திலும் இருக்கும் அழுக்குகளை அகற்ற வேண்டும். அவை தூய்மையுற்றால் அங்குக் கடவுளின் வருகையை நாம் ஒவ்

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

அவ்வுருவோ, மாலுருவோ, ஆன்ஏற்றாய் நீறு அணிவது எவ்வுருவோ, நின்உருவ மேல்.

[கண் சேர்ந்த நெற்றியையும் நஞ்சுக் கறுப்பையுடைய கண்டத்தையும் கொண்ட எம்பெருமானே, இடப வாகனத்தை உடையானே, உன்னுடைய இயல்பு முழுவதையும் உணரும் ஆற்றல் இல்லாதவள் யான்; ஆதலால், நீயே என் ஐயம் நீங்கப் பணித்தருள வேண்டும். நின்னுடைய பல வகைத் திருக்கோலங்களுக்குள் உமாதேவியாகிய பெண்ணின் நல்லாள் சேர்ந்த அந்தத் திருவுருவமோ, திருமாலோடு இணைந்தபோது அந்தத் திருமாலின் பகுதியோ எவ்வுருவம் திருநீற்றை அணிவது?

மாட்டாதேன்-யான் ஆற்றல் பெறுதவள். பணித்துக் காண்: காண் என்பது அசை; அதற்குப் பொருள் இல்லை; பணிப்பாயாக என்பதே பொருள். நின் உருவமேல்-நீ கொண்டருளும் பல வகை உருவங்களுக்குள்; மேலென்பது இல் என்னும் ஏழாம் வேற்றுமை உருபாக நின்றது; கீழ் என்பதற்கு மாறான மேலிடம் என்று கொள்ளக் கூடாது. அவ்வுருவோ, மாலுருவோ என்பவற்றிலுள்ள ஓகாரம் வினா. எவ்வுருவோ என்பதில் எகரமே வினாப் பொருளைத் தருவதால், ஓகாரம் அசை.

'கண்புணரும் நெற்றிக் கறைக்கண்டா, ஆன் ஏற்றாய், நின் உருவமேல், பெண்புணரும் அவ்வுருவோ, மால் உருவோ, நீறு அணிவது எவ்வுருவோ? பண்பு உணரமாட்டாதேன்; நீயே பணித்துக்காண்' என்று அந்வயம் செய்து பொருள் கொள்ள வேண்டும்.]

இது அற்புதத் திருவந்தாதியில் 59 - ஆவது பாடல். ○

வொரு விநாடியும் எதிர்பார்க்கலாம். இரவும் பகலும் ஒவ்வொரு விநாடியும் இப்பொழுதோ மறு விநாடியோ மிகவும் ரகசியமாகக் காதலன் தன் காதலியைக் காண வருவது போல, இறைவன் தூய்மையான இதயத்தை நாடி வருவதை நாம் உறுதியாக எதிர்பார்க்கலாம்.

'அவர் இப்பொழுது வருவாரோ, இந்த விநாடி வருவாரோ, அடுத்த விநாடி வருவாரோ?' என்று பேராவலோடு, வேறு எந்த நினைவுமே இல்லாமல், அவரையே ஏங்கிக் கிடக்கும் இதயங்களை நாடித் தான் இறைவன் வருகிறார். இத்தகைய ஏக்கம் தியானம் செய்பவரின் மனத்தில் எப்போதும் எத்தனை மாதங்களானாலும் ஆண்டுகளானாலும் இருக்க வேண்டும்.

### பரம்பரை விவசாயி

ஸ்ரீராமகிருஷ்ணர் இத்தகையவர்களைப் பரம்பரை யாக விவசாயம் செய்யும் விவசாயிகளோடு ஒப்பிட்டுச் சொல்லுவது வழக்கம். ஒரு கிராமத்தில் பரம்பரை பரம்பரையாக, அவன் பாட்டன், பாட்டனுக்குப் பாட்டன் தலைமுறையிலிருந்து ஒருவன் விவசாயம் செய்து வருகிறான். அவன் அந்தக் கிராமத்தில் இரண்டு ஆண்டு, மூன்று ஆண்டு, பத்து ஆண்டுகள் மழை இல்லாமற் போனால்கூடத் தன் விவசாயத் தொழிலை விட மாட்டான். ஆனால் விவசாயத்தைப் பொழுது போக்காக நடத்துபவர்களோ, லாபம் கருதி நடத்துபவர்களோ, ஒன்று இரண்டு போகம் மழை பெய்யாமற் போனால்கூட விவசாயத்தை விட்டு விடுவார்கள்.

அதுபோல, உண்மையான சாதகன் ஆண்டவன் காட்சி விரைவாகக் கிடைக்கவில்லை என்பதற்காகத் தியானத்தை விடமாட்டான். அவன் எத்தனை நாட்கள் ஆனாலும், எத்தனை மாதங்கள் ஆனாலும், ஆண்டுகள் ஆனாலும் கடவுள் காட்சியின் இன்பத்தைப் பெறும் வரையில் தியானத்திலேயே மூழ்கிக் கிடப்பான். பிறகு அதிலிருந்து மேல் நோக்கி மகிழ்ச்சியோடு தன் பயணத்தைத் துவக்குவான்.

எனவே ஆன்மிக வாழ்வில் கடவுளை அடை வதற்குத் தொடர்ந்த, இடைவிடாத முயற்சி வேண்டும். எனவே, தியானம் செய்வது மகிழ்ச்சி யாக இருந்தாலும், வறட்சியாக இருந்தாலும்—ஆரம்ப காலத்தில் இது எல்லோருக்கும் வறட்சி யாகத்தான் இருக்கும்—நாம் சோர்வடையக் கூடாது. மேலும் மேலும் தொடர்ந்து செய்ய வேண்டும். அவ்வாறு சில ஆண்டுகள் தொடர்ந்து செய்தால் தியானத்தில் நாம் பேரானந்தத்தை அனுபவிக்கலாம். ஆனால் ஆரம்ப காலத்தில் தொடர்ந்து பாடுபட்டுத் தியாகம் செய்ய வேண்டும். சாதகர்களின் வாழ்க்கையில் தியானத்தின் ஆரம்ப காலமான மூன்று நான்கு ஆண்டுகள் மிகவும் வறண்ட காலமாக இருக்கும். அதைத் தாக்குப் பிடித்துக்கொண்டு எப்படியும் நாள்தோறும் தியானம் செய்து வர வேண்டும்.

### நம்மிடம் நம்பிக்கை

மற்றொரு விஷயத்தையும் நாம் நன்றாகக் கவனத்தில் கொள்ள வேண்டும்: அது நம்மிடத்தில் நாம் கொள்ள வேண்டிய அசைக்க முடியாத தன்னம்பிக்கையாகும். 'நாம் இந்தப் பிறவியிலேயே கடவுளைக் காண்போம். நிச்சயம் நம்மால் காண முடியும்' என்ற தன்னம்பிக்கை ஒவ்வொரு சாதக ரிடத்திலும் வேண்டும். நாம் பலவீனர்களாக இருக்கக்கூடாது. நம்மிடத்தில் இந்த உடலோடும், இந்த மனத்தோடும் நாம் கடவுளைக் காண்போம் என்னும் அசைக்க முடியாத, வலிமையான நம்பிக்கை இருக்க வேண்டும். இந்த நம்பிக்கை ஏற்பட்டாலே ஆன்மிக வாழ்வில் நெடுந் தொலைவைக் கடந்துவிட்டோம் என்பது பொருள். நம்முடைய ஆழ்ந்த முயற்சி இல்லாமல், பிடிவாத மான நம்பிக்கை இல்லாமல் ஆன்மிக வாழ்வில் எதையுமே அடைய முடியாது.

### சரணாகதி

சில நேரங்களில் மனிதர்கள், 'நான் என்னையே கடவுளிடம் ஒப்படைத்து விட்டேன், அவரிடம் சரணாகதி அடைந்துவிட்டேன். என் இச்சையாக நான் செய்வதற்கு எதுவுமே இல்லை' என்று பேசக் கேட்கிறோம். ஆனால் அவர்கள் பேசுவது போல் கடவுளிடம் நம்மைச் சரணாகதியுடன் ஒப்படைத்து விடுவது என்பது அவ்வளவு சுலபமான காரியம் அல்ல. இந்தச் சரணாகதி நிலை, அடைவதற்கு மிகவும் கடினமாகும். நாம் நமக்குள் மிகப் பெரிய ஆன்மிகப் போராட்டத்தை நடத்தி அதில் வெற்றி கண்டால் தவிர, சரண் அடையும் மனநிலையைப் பெற முடியாது. நாம் வாழ்க்கையில் பெரும் சாதனையை நடத்தினால் அன்றி, நம்மிடத்தில் இருக் கும் வலிமை முழுவதையும் கடவுளைக் காணத் திரட்டினால் அன்றி, அந்தப் போராட்டம், வலிமை இவற்றினால் 'நாம்' என்பது எதுவுமே இல்லை,

நம்மால் ஆவதும் எதுவுமே இல்லை என்பதை உணர்ந்த பிறகே நம்மால் கடவுளிடத்தில் சரண் அடைய முடியும். அதன் பிறகே கடவுளின் கருணை நம்மீது பிறக்கும். இத்தகைய உழைப்பு எதுவும் இல்லாமல் ஒருவர் கடவுளிடம் சரணாகதி செய்துவிட்டேன் என்று சொல்லுவதோ, அவ்வாறு நினைத்துக்கொண்டு கடவுளிடம் அருளை எதிர்பார்ப்பதோ வீணான காரியமாகும்.

### எப்போதும் வாசற்படியில்

ஸ்ரீராமகிருஷ்ணர், ''பகவானது வாசற்படியில் எப்போதும் நாம் காத்துக் கொண்டிருக்க வேண்டும்'' என்று சொல்வார். அப்படி இருந்தால் அவர் கருணை நிச்சயம் ஒரு நாள் நமக்குக் கிடைக்கும் என்று அடிக்கடி சொல்லுவது வழக்கம். நம்முடைய கடமை அவருடைய வாசற்படியில் காத்துக் கொண்டிருப்பது. வாசற்படியில் காத்துக் கொண்டிருப்பது என்றால் நாம் எப்போதும் அவரை நினைத்துக்கொண்டிருக்க வேண்டும் என்பதுதான். அப்படி நினைத்துக்கொண்டு, தியானித்துக்கொண்டு இருக்கும் நிலையில் அவருக்கு அருகில் இருக்க வேண்டும். அப்படி அவருக்கு அருகிலேயே எப்போதும் இருந்தால் அவரை அடையக்கூடிய வாய்ப்புகள் நமக்கு மிகவும் அதிகமாகும். அப்படி வாய்ப்பு அதிகம் இருந்தாலும் அந்த வாய்ப்புகள் அவரை நமக்குக் காட்சி தந்துதான் ஆக வேண்டும் என்று கட்டாயப்படுத்த முடியாது. நமக்கு அருள் தருவது என்பது கடவுளுடைய விருப்பத்தைப் பொறுத்தே இருக்கிறது. என்றாலும் நாம் அவருக்கு அருகிலேயே எப்போதும் இருந்தால் அவரைக் காண்கிற, அவரது அருளைப் பெறுகிற வாய்ப்பு அதிகமாகும். தொலைவில் இருந்தால் அந்த வாய்ப்பே ஏற்படாது.

### கடவுளின் கருணை

எனவே நாம் கடவுளைக் காணச் சாதனைகள் செய்திருக்கலாம்; இலட்சம் இலட்சமாக ஜபம் செய்திருக்கலாம்; அல்லது அளவுக்கு அதிகமாகப் பல வேறு சாதனைகள் செய்திருக்கலாம். ஆனால் அதுவே நமக்குக் கடவுளின் காட்சியைத் தந்துவிடும் என்று சொல்ல முடியாது. நம்முடைய முயற்சிகள் யாவும் அவரை அடைய நாம் போடும் சாதாரணப் பாதைதான். இறுதியில் கடவுளின் கருணைதான் நமக்கு அவரை அடையக் கூடிய நிலையை உண்டாக்கும்.

எனவே, நம்முடைய சொந்த முயற்சி இல்லாமல் கடவுளை அடைய முடியாது. அதே நேரத்தில் சொந்த முயற்சி மட்டுமே நிச்சயம் கடவுளை நம்மால் அடையச் செய்யும் என்றும் சொல்ல முடியாது. ஏனென்றால், கடவுளை அடைவது என்பது கடவுளின் அருட்கருணையைப் பொறுத்தே உள்ளது. கடவுளின் கருணைதான் நம்மை அவருடைய உண்மையான தெய்விகத்தை உணரவும் துணை செய்கிறது.

[அடுத்த இதழில் முடியும்]

### மண்டபத்தில் ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் புயல் நிவாரணப் பணி

மண்டபத்தில் புயலால் பாதிக்கப்பட்டவர்களுக்கு ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் சிறு அளவில் உடனடியாக நிவாரணப் பணி புரிந்திருக்கிறது. சுமார் ரூ. 5000 பெறுமான சமையல் பாத்திரங்கள், சேலைகள், வேஷ்டிகள், குழந்தை ஆடைகள் ஆகியவை 76 குடும்பங்களுக்கு விநியோகிக்கப்பட்டன.

### ஸ்ரீமத் சுவாமி கைலாசானந்தரின் மறைவு

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்—சங்கம் ஆகியவற்றின் துணைத்தலைவராக விளங்கிய ஸ்ரீமத் சுவாமி கைலாசானந்தஜி மகராஜ் அவர்கள் கல்கத்தாவில் 16—12—78ஆம் நாள் விடியற் காலை 2-10 மணிக்கு பூதவுடல் நீத்து ஸ்ரீகுருதேவருடன் ஐக்கியமுற்றார். அவரைப் பற்றிய கட்டுரை அடுத்த இதழில் தலையங்கமாக இடம்பெறும்.

# ஐயாறு

ஆர். ரங்காசாரி

பாடல்—பெயர்

திருப்பாவைக்குப் பட்டர்பிரான் கோதையே சூட்டிய பெயர்—'சங்கத் தமிழ்மாலை முப்பது'. இதனைப் பாட்டு 'ஆறைந்து' என்று குறிப்பிட்டார் மறைமுடித் தேசிகன். திருப்பாவை 'ஐயாறு' என்று சற்றே மாற்றியருளினர், மூன்றுவது பிரம்ம தந்த்ர ஸ்வதந்த்ர ஜீயர். 'கோதை தமிழ் ஐயைந்தும் ஐந்தும்' என்பதும் ஆன்றோர் வாக்கே. இவ்வாறு ஐந்தின் அடிப்படையாய் எழுந்த பெயரெல்லாம், திருப்பாவையின் ஒவ்வோர் ஐந்து பாசுரங்களிலும் ஒரு தனிப்பொருள் விளக்கப்படுவதைக் குறிக்கின்றன என்று, பலவகையால் புறப்பொருளாகவும் அகப்பொருளாகவும் நயம்பட உரைப்பர் அறிஞர். நாம் இங்கே பிறிதொரு சுவையை நோக்குவோம்.

ஆற்றுப்படை—உபநிடதம்

தமிழ்மொழியில், 'ஐ' என்பது, 'இறைவன், கணவன்' முதலிய பல பொருள் கொண்ட ஒரு சொல்லாகும். 'ஆறு' என்பது, 'வழி, வகை, விளக்கம், செய்தி' முதலிய பொருளைக் குறிக்கும். ஆகவே, 'ஐயாறு' என்னும் கூட்டுச் சொல்லுக்கு, 'இறைவனை அடையும் வழி—பரமன் அடி காட்டும் விளக்கம்' என்னும் ஒரு தெள்ளிய பொருள் கிடைக்கும். எனவே, திருப்பாவை, பண்டைத் தமிழ் இலக்கிய முறையில், 'இறைவன் (திரு-ஐ = திருமால்) ஆற்றுப்படை' நூலாகும்.

முதற்பாட்டில், 'நாராயணனே நமக்கே பறை தருவான்' என்ற இலக்கினோடு, அதனைப் பெறும் வழியைக் காட்டத் தொடங்கி, 'அப்பறை கொண்ட ஆற்றை'ச் சொன்னுள் கோதை என்று இறுதிப் பாடல் அமைந்திருப்பது, மேற்கண்ட விளக்கத்தை வலியுறுத்தும் அன்றோ?

உபநிடதம் என்ற பதமும் 'பிரம்மத்தின் அண்மையில் சேர்க்கும்' என்ற பொருள் உடையது. ஆகவே அதுவும் ஓர் ஆற்றுப்படை; 'வேதமனைத்துக்கும் வித்தாகும்' திருப்பாவையும் ஓர் உபநிடதம். பல கிளைகள் (சாகைகள்) தழைத்துப் பரவிய ஆல் போன்ற நான்மறை அமரும் வித்து திருப்பாவை யானல், அவைதம் விழுப்பொருளாம் பரமனின் பெருமையும் மகிழ்ச்சியும் கோதையின் அருட் பாலவே என்று முதல் மறையே முன்கூட்டி அறுதியிடுகிறது, காணீர் –

> உபந: ஸவநா கஹி ஸோமஸ்ய ஸோமபா: பிப,
> கோதா இத் ரேவதோ மத: || —ரிக்வேதம் 1–4–2

இந்த வேதமந்திரம் நோன்பினைக் காக்க, பரமனை அழைக்கிறது. இதன் உள்ளுறை பொதிவே திருப்பாவை என்று நுண்ணியதாய் விளக்கியுள்ளார், அமரர் ப. ரே. திருமலை ஐயங்கார். ஆகவே



'வேதவேத்யன்' கோதாநாதனும் அரங்கனய்த் தோன்றியபோது, வேதம் மாதவச் செல்வியாம் கோதையின் நாவில் திருப்பாவையாய் அவதரித்தது என்று சொல்லலாமே!

> வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே சித்தாத்மஜாநாதே |
> வேத: புவிஸுதாயா: ஆஸீத் ஸாக்ஷாத் வ்ரத
> கிராத்மநா ||

குறிப்பு: சித்தாத்மஜா=விஷ்ணுசித்தர் மகள் கோதை. அவள் நாதன் அரங்கன். புவிஸுதா= பூமிதேவியின் பிறப்பு=கோதை. வ்ரதகிரா= நோன்புச் சொல், பாவைப் பாட்டு.

அன்றியும், ஒவ்வொரு பாட்டின் இறுதியில் வரும் 'பாவாய்' என்னும் சொல்லால், பெரிய பிராட்டியாம் திருமகள் விளிக்கப்படுவதாகக் கொள்வது விசிஷ்டாத்வைத தரிசனத்துக்குச் சாலப் பொருந்தும். அவள் அருளாலே எல்லாப் பயனையும் அவள் கேள்வன் நமக்கு அளிப்பன் என்று திருமகளே சாட்சியாய் ஆண்டாள் இறுதியில் இனிது கூறு

திருவே—'செல்வத் திருமாலால் எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர் எம்பாவாய்.'

இன்னும் தெளிந்து, கோதை கமலையின் பிறிது ஓர் உருவே எனத் தேசிகன் அருளுகிறார்:—

ஸாக்ஷாத் க்ஷமாம் கருணயா கமலாம் இவாந்யாம்
கோதாம் அநந்யசரண: சரணம் ப்ரபத்யே ||

பெரியாழ்வாரின் வாக்கையும் இங்கு நோக்கவும்—'ஒருமகள் தன்னைத் திருமகள் போல வளர்த்தேன்.'

தேசிகன் அருளிய கோதாஸ்துதி என்னும் சொல்லுக்கு, கோதை அருளிய போற்றிப்பாடல்கள் என்று பொருள் கொண்டோமானால், அந்தப் பாவைப் பாடல்களைப் பயில்பவர்கள், அரங்கநாதனிடம் பகுமானம், சம்மானம் (திருப்பாவை, 27ஆம் பாட்டு) பெறுகிறார்கள் என்று தேசிகன் கூறுவதாகத் தெளியலாம்.

வக்தி கோதாஸ்துதிம் ய: ஸ பவதி
பஹுமாந்ய: ஸ்ரீமதோ ரங்கபர்த்து: |

### ஐந்தும் ஆறும்

'ஐயாறு' என்பதை 'ஐந்து, ஆறு' என்ற எண் வகையில் கொண்டு, பாவைப் பாடல்களில், வேறு சில நயங்களையும் இனிக் காண்போம். பகவானின் பேர்பாட, கோதைப்பிராட்டி திருப்பாவையில் நமக்கு வழங்கியுள்ள திருநாமங்கள்—'நந்தகோபன் குமரன்', 'யசோதை இளஞ்சிங்கம்', 'நாராயணன்' எனத் தொடக்கமாய், 'மாதவன், கேசவன், திருமால்' ஈறாக 56 ஆகின்றன. பஞ்சாயுததரனும் ஷாட் குண்ய (ஆறுகுண) பூர்ணனும் ஆகும் பரமனின் நாமத்தொகை ஐந்தும் ஆறும் முறையே வைக்கப்படுவதனால் ஆய 56!

ஐந்தையும் ஆறையும் கூட்டினால் வரும் எண் 11; ஆகவே ஐயாறும் திருப்பாவை, தமிழ் இலக்கியப் பதினோராடல்களில் சீரிய பகுதியாம் 'பாவை நூல்' என்ற குறிப்பையும் காணுவோமே!

தனிப்பாசுரங்களிலும் 'ஐந்து, ஆறு' இவற்றின் தொடர்பைக் காணலாம். இங்கு இரண்டு பாடல்களை மட்டும் ஆய்வோம்.

பாவை நோன்புக்கு அங்கமாகச் செய்ய வேண்டியவற்றையும் விலக்க வேண்டியவற்றையும் கூறும், 'வையத்து வாழ்வீர்காள்' என்ற பாடலில், பரமன் அடிபாடி, நாட்காலே நீராடி, ஐயமும் பிச்சையும் கைகாட்டி, எண்ணி, உகந்து என்ற தொடரை ஐந்தென்றும் ஆறென்றும் கணக்கிடலாம்; இது போல், 'நெய்யுண்ணோம் பாலுண்ணோம், மையிட்டு எழுதோம், மலரிட்டு முடியோம், செய்யாதன செய்யோம், தீக்குறளை சென்றோதோம்' என்னும் தொடரை ஐந்தென்றும் ஆறென்றும் எண்ணலாம். இரண்டு வகையும் உய்யும் **ஆறு** (நற்கதிக்கு வழி) என்பதைக் கொண்டு, ஆறு என்ற எண்ணையே தேறலாம்! இதனடியாக, மேலும் இந்தப் பாசுரம் ஆறு பதங்கள் உள்ள மந்திரமான 'த்வய'த்தையும், ஐந்து அங்கங்கள் கூடிய அங்கியான பிரபத்தியையும் விளக்குவதாகத் தெளியலாம்.

'மாயனை' என்ற பாசுரத்தில், மாயனை, மதுரை மைந்தனை, யமுனைத்துறைவனை, ஆயர்குல அணி விளக்கை, தாமோதரனை என்ற படியில் ஐவகையான பரமனை, தூயோமாய் வந்து, தூமலர் தூவி, தொழுது, பாடி, சிந்திக்க என்ற ஆறு வகையில் போற்ற வேண்டும் என்ற குறிப்புத் தோன்றுகிறது அல்லவா?

இங்கு, ஆயர்குலமாயனே ஞாலம் அனைத்துக்கும் காப்பு—'மித்யாகோப: விச்வகோப்தா' என்னும் தேசிகனின் சொற்சைலியையும் சிந்திக்கலாம்.

### அறம் வளர்க்கும் நாயகி

ஐந்து ஆறுகள் சூழும் தலம் 'ஐயாறு' (திருவையாறு). அங்கு உறையும் ஈசன் பஞ்சநதேசுவரன் (ஐயாறப்பன்); அவன் தேவி தர்மஸம்வர்த்தினி (அறம் வளர்க்கும் நாயகி). இது போல் பஞ்ச அங்கம் (ஐயாறு—ஐவழி) கொண்ட பிரபத்திக்கு உரிய நாராயணனும் 'ஐயாறப்பன்' ஆவான். அறத்துக்கெல்லாம் சீரியதாய் வித்தாய் உள்ளது, 'ஜீவன்கள் பரமனுக்குச் சேஷம் (உடைமை)' என்ற ஞானமே. இதனை விளக்கி வளர்த்தவள் கோதைநாயகி. அவளுடைய முழக்கமான 'என்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு உற்றோமே ஆவோம்; உனக்கே நாம் ஆட்செய்வோம்; மற்றை நம் காமங்கள் மாற்று' என்பதை அறியாதார் யார்? ஆகவே அவளும் தர்மஸம்வர்த்தினி (அறம் வளர்க்கும் நாயகி) என்பது தெளிவு. அஞ்சு குடிக்கு ஒரு சந்ததியாய்த் தோன்றியும் நம் பிழைகளைக் காட்டி, பரமனின் சீற்றத்துக்கு 'அஞ்சு' என்னாமல், இறைவனின் சினமே ஆறுவது முறை—'சீறி அருளாதே' என்று நமக்கு ஆறுதல் சொல் அளித்த அந்தத் தேவி கோதை நம்முடைய உள்ளத்தில் என்றும் திகழட்டும்!

"விலஸது ஹ்ருதி கோதா விஷ்ணுசித்தாத்மஜா." ●

# குரு பக்தி

மொகலாய மன்னன் ஒளரங்கசேப் பிற மதத்தைச் சேர்ந்தவர்களை ஈவு இரக்கமின்றிக் கொடுமைப்படுத்தி வந்தான். அவனது கட்டளைப் படி, இஸ்லாம் மதத்தைத் தழுவ மறுத்த சீக்கியர் களின் மதகுரு தேக்பகதூர் படுகொலை செய்யப் பட்டார்.

அத்துடன் ஒளரங்கசேப்பின் மனம் திருப்தி அடையவில்லை. அந்த உடலுக்குச் செய்ய வேண்டிய இறுதி மரியாதைகளைக்கூட நடக்க விடக் கூடாது என்று அவன் தீர்மானித்தான். "தேக்பகதூரின் உடல் அழுகியே மண்ணில் மடிய வேண்டும்; அதை யாரும் எடுத்துச் செல்லவிடக் கூடாது" என்ற உத்தரவுடன் கடுமையான காவல் வேறு போட்டிருந்தான்.

குரு கோவிந்தசிங்கிற்கு அப்போது பதினான்கு வயதுதான் பூர்த்தியாகியிருந்தது. எப்படியாவது தந்தையின் ஈமச் சடங்குகளைச் செய்துவிட வேண்டும் என்று அவர் பஞ்சாப்பிலிருந்து தில்லியை நோக்கிப் புறப்பட்டார். 'கொடிய மனமுடைய ஒளரங்கசேப் குரு கோவிந்தசிங்கைக்கூட என்ன வேண்டுமானாலும் செய்துவிடக் கூடியவனாயிற்றே!' என்று மக்கள் அனைவரும் மிகவும் கவலைப்பட்டனர். ஆனால் உறுதியான தீர்மானத்துடன் சென்ற கோவிந்தசிங்கைத் தடுத்து நிறுத்தும் ஆற்றல் எவரிடமும் இல்லை.

ஆனால் அவர் தில்லி மாநகரை அடைவதற்குப் பல மைல் தூரத்திலேயே சீக்கிய மதத்தைச் சேர்ந்த ஒரு குதிரை வண்டிக்காரனும் அவன் மகனும் கோவிந்தசிங்கைக் கண்டனர். அவர்கள் இருவரும் மிகவும் கெஞ்சிக் கேட்டுக் கொண்ட தற்கு இணங்க, குருகோவிந்தசிங் மறைவாக அந்த இடத்தில் இருக்க ஒப்புக்கொண்டார். ஏனென்றால், தானும் தன் மகனும் எப்பாடு பட்டாகிலும் ஸ்ரீகுரு தேவரின் சடலத்தைக் கொண்டு வந்துவிடுவதாக அந்த வண்டிக்காரன் உறுதி கூறினான். வண்டிக் காரனாக இருந்தால் என்ன? சீக்கியர்களின் வீர மரபைச் சேர்ந்தவன் அல்லவா அவன்!

தந்தையும் மகனும் தில்லியை அடைந்தனர். குரு தேக்பகதூரின் சடலம் இருந்த இடத்தைக் கண்டுபிடிப்பது அவ்வளவு சுலபமாக இல்லை. என்றாலும் மிகவும் சிரமப்பட்டுக் குருதேவரின் உடல் வைத்திருந்த இடத்தை அறிந்துகொண்டனர். இதற்குள் அந்த உடல் அழுகி அதிலிருந்து துர் நாற்றம் வீசத் தொடங்கியிருந்தது. காவலுக்காக வைக்கப்பட்டிருந்தவர்கள்கூடப் போதுமான அளவு விலகியே இருந்துகொண்டு களியாட்டங்களில் மூழ்கியிருந்தனர். மக்கள் அந்தப் பக்கமாகப் போவதையே நிறுத்திவிட்டிருந்தனர். தப்பித் தவறிச் சென்றவர்கள்கூட முகத்தை வேறு புறம் திருப்பிக்கொண்டு மூக்கையும் மூடிக்கொண்டே சென்றனர்.



தந்தை மகனுடன் அவ்விடத்தை அடைந்தான். நிலைமையைப் புரிந்துகொண்டான். மகனைப் பார்த்துக் கூறினான்: "மகனே! நம் இருவரில் யாரேனும் ஒருவர் கண்டிப்பாக உயிரை விட வேண்டும். ஏனெனில் இந்த உடலை அப்புறப்படுத் தினால் அந்த இடத்தில் வேறு உடலை அவசியம் வைத்தாக வேண்டும். இல்லாவிட்டால் உடல் அப்புறப்படுத்தப்பட்டது அனைவருக்கும் தெரிந்து விடும். சீக்கியர்களுக்கு ஒரே ஆதாரமாக விளங்கும் குரு கோவிந்தசிங்கையும் ஒளரங்கசேப் தீர்த்துக் கட்டிவிடுவான். நீயோ இளைஞன். உடலில் உனக்கு நல்ல வலிமையும் இருக்கிறது. எனவே, குருதேவரின் உடலை நீயே எடுத்துச் செல். நான் இறந்துவிடுகிறேன்."

மகன் அதற்கு ஏதாவது பதில் கூறுவதற் குள்ளாகவே, தந்தை தன் கையிலிருந்த வாளால் தன்னை மாய்த்துக்கொண்டான். மகன் தந்தையின் உடலைப் போர்த்தி, குரு தேக்பகதூரின் உடல் இருந்த இடத்தில் வைத்தான். தேக்பகதூரின் உடலைச் சுமந்துகொண்டு எவ்வித இடையூறு மின்றி, குரு கோவிந்தசிங்கிடம் வந்து சேர்ந்தான்.

**



# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

## 1979 ஜனவரி மாத நிகழ்ச்சிகள்

**ஸ்ரீமத் சுவாமி விவேகானந்த ஜயந்தி விழா :**

20-1-79 சனி — ஜன்ம திதி : விசேஷ பூஜை, பஜனை, ஹோமம் முதலியன (காலை 5 மணி முதல் 11-30 மணி வரை)

காலை 8-30 மணி — சென்னைக் கடற்கரையில் நிறுவப்பட்டுள்ள சுவாமி விவேகானந்தரின் திருவுருவச் சிலைக்கு மலர்மாலைகள் அணிவித்தல்

மாலை 7-00 மணி — சொற்பொழிவு (மாலை வழிபாட்டின் பிறகு)

21-1-79 ஞாயிறு : — **பொதுவிழா நிகழ்ச்சிகள்**

மாலை 4 மணி முதல் 5-30 வரை — பக்திப் பாடல்கள்

மாலை 5-30 மணி முதல் 7 வரை — பொதுக் கூட்டம்

தலைவர் : சுவாமி தபஸ்யானந்தர்

பேசுவோர் : டாக்டர் அவ்வை நடராஜன் (தமிழ்)

குலபதி பாலகிருஷ்ண ஜோஷி (ஆங்கிலம்,

**சத் சங்கம் :** — ஞாயிறுதோறும் மாலை 4 மணி முதல் 8 மணி வரை

மாலை 4 மணி முதல் 4-20 வரை — ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாம பாராயணம் (14-1-79)

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாம பாராயணம் (7-1-79 & 28-1-79)

மாலை 4-30 முதல் 5-30 வரை — சொற்பொழிவு (தமிழ்)

1. ஸ்ரீமத் பாகவதம்—திரு 'அண்ணு' (26-1-79)
2. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம்—திரு வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள் (7-1-79)
3. ஸ்ரீமத் ராமாயணம்—டாக்டர் என். விழிநாதன் (14-1-79)

மாலை 5-35 முதல் 6-30 வரை — சொற்பொழிவு (ஆங்கிலம்)

1. பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர்—சுவாமி தபஸ்யானந்தர் (7-1-79 & 14-1-79)
2. ஸ்ரீமத் பகவத்கீதை—சுவாமி கபீரானந்தர் (28-1-79)

**வார நாட்களில் நடைபெறும் உரை நிகழ்ச்சிகள்**—(மாலை 5-45)

வழக்கம் போல் ஒவ்வொரு நாளும் நடைபெறும்

**சிறப்புச் சொற்பொழிவுகள் :** **சனிக்கிழமைகளில்** மாலை 5-45 மணிக்கு

1. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்—திரு வி. எஸ். வி. குருசாமி சாஸ்திரிகள் (27-1-79)
2. ஸ்ரீமத் ராமாயணம்—டாக்டர் என். விழிநாதன் (13-1-79)

**விசேஷ தினங்கள் :**

21-1-79 ஞாயிறு : அந்தர் யோகம் (சாதனை தினம்)

3-1-79 புதன் : சுவாமி சாரதானந்த ஜயந்தி

12-1-79 வெள்ளி: சுவாமி துரியானந்த ஜயந்தி

29-1-79 திங்கள் : சுவாமி பிரம்மானந்த ஜயந்தி (மாலை 5 மணிக்கு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம்)

31-1-79 புதன் : சுவாமி திரிகுணாதீதானந்த ஜயந்தி

8-1-79 & 24-1-79 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு வழக்கம் போல் ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

மடத்தைச் சேர்ந்த சாதுக்களால் சென்னை நகரத்தில் மற்ற நிகழ்ச்சிகள் வழக்கம் போல் நடைபெறும்.

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தொலைபேசி : 71231

தலைவர்,

வெளிநாடுகளுக்கு ஆண்டுச் சந்தா விவரம்: இலங்கை (இந்திய நாணய மதிப்பில்)—ரூ. 10 யு. எஸ். ஏ.—$ 4 பிற நாடுகள்—£ 2 ஆயுள்சந்தா: இலங்கை (இந்திய நாணய மதிப்பில்)—ரூ. 150 யு. எஸ். ஏ.—$ 70 பிறநாடுகள்—£ 25

தனிப் பிரதி வெளிநாடு ரூ. 4